





கரு:
உணர்ச்சிக்கவிஞர்
காசி ஆனந்தன்
வரைவு:
சாள்ஸ்
தேவசகாயம்

# கருத்துப் படம் – கதைப் படம்

தமிழர்
தாயகத்தில் அரசு, மற்றும் ஆயுதக் குழுக்களால் நடத்தப்படும் படுகொலைகள் பற்றிய ஐரோப்பிய சமூகத்தின் நிலைப்பாடு.









வானதி

59



செங்கோன்

40

# உள்ளே!!!



7



பாலா

சிவதாசன்

16

அட்டைப்படம் - நன்றி: சூரியப் புதல்வர்கள் 2001 பக்-17



முழக்கு பறை நொறுக்கு சிறை
-கவிஞர் காசி ஆனந்தன்

**தொகுதி: 1 இதழ்: 3 , 2005 நவம்பர்**

பதிப்பாசிரியர்:
திரு

ஆசிரியர்:
மாமூலன்

ஆசிரியர் குழு:
நக்கீரன்
வானதி

தட்டச்சு:
நீலா லோகன் | கலைச்செல்வி

வடிவமைப்பு உதவி:
சுகந்தன், சந்துரு

படங்கள்:
போஸ், மாதுளா

வெளியீடு:
முழக்கம்
104 ஹைமஸ் வீதி
ரொரன்ரோ
ஒன்ராரியோ M1L 2C9
கனடா

Muzhakkam
104 Hymus Street
Toronto ON
M1L 2C9
CANADA

Tel: 416 261 9099 Fax: 416 261 6745
அச்சு:
ARROW WEB PRINTERS
அம்பு செய்தித்தாள் அச்சகம்

இணையம்: www.parai.org
மின்னஞ்சல்: info@parai.org

**ISSN 1718-0341** PARAI (PRINT)



பல சமூகங்கள் தத்தமக்குரிய மரபின் தொடர்ச்சிகளினூடாக தமது அடையாளங்களை நிறுவிக்கொள்கின்றன. இப்படிப் பல விழுமியங்களும் நிறுவப்படுகிறன்றன.

வரலாறு தாண்டிய காலத்தில் இவற்றில் எது பெரும்பான்மையாக இருந்ததோ அதுவே அந்தக் காலகட்டத்திற்குரிய விழுமியமாக பிந்தைய காலங்களில் அடையாளம் காணப்படும்.

இந்த அடையாளங்கள் எப்போதும் பெரும்பான்மையின் குரலாக இருப்பது, மோசமான சமூக விளைவாக அல்லாதுவிடினும், அவை அவ்வப்போதான சமூக நடப்புக்களை அடையாளம் காட்டுகின்றன. அப்படியே அனைத்து அடையாளப்படுத்தல்களும் வரலா-றாகின்றன என்றும் கொள்ள முடியாதுதான்.

இந்நிலையில் தற்போதைய சமகாலம், எதிர்காலத்தின் வரலாறாக ஆகும் என்றால் எமது எதிர்கால வரலாற்றுக்கு நாம் சரியான தொடர்ச்சிகளை, பதிவுகளை விட்டுச் செல்கின்றோமா என்று பொறுப்புடன் பார்த்துக் கொள்ளவேண்டியது சிந்திப்பவர்களின் கடமையாகிறது.

தமிழர்கள் தங்கள் ஒற்றுமையைத் தங்களே குலைத்துக்கொண்ட சங்கத்திற்கு முற்பட்ட சில நூற்றாண்டுகளிலிருந்து தமிழர்களின் சிதைவு தொடர்ந்து நிகழ்கின்றது. தமிழர்களல்லாத 'தமிழர்' பலர் தாங்களைத் தமிழராக அடையாளம் காட்ட முற்பட்டதும் இதற்கு ஒரு காரணம். தமிழராகிய நாம் ஒற்றுமையின்றி, காழ்ப்புணர்வுடன் இருத்தலுக்காக மட்டும் உடன்பிறந்தாரையே வெறுப்புடன் பார்ப்பதும் மற்றொரு காரணம். இவை தவிர்ந்த புறச்சூழல்களும் உள்ளனதான்.

நல்லாயிருக்கும் உடன் பிறப்பைப் பார்த்துப் பொறாமைப்படும் சமூகமாக நாம் மாறியிருக்கிறோம். பெருமைப்படுத்திப் பாராட்டித் தட்டிக்கொடுத்து வாழ்வதைவிட நமது உடன்பிறப்பையே, தமிழரையே, காட்டிக்கொடுத்து வாழும் - இழிவுபடுத்தி வாழும் தொடரச்சியில் இருக்கிறோம்.

தமிழ் என்று உரைப்பதே இன்று கேலிக்குரியதாக பல 'அறிஞர்களால்' எண்ணப்படுகிறது. (இவர்களில் 99 விழுக்காடு மாக்களுக்கு தமிழைத்தவிர வேற்று மொழி தெரியாது என்பது ஒரு புறமிருக்க)

தமது உடன்பிறப்பை அவரது வாழ்விலும் தாழ்விலும் மரணத்திலும் அங்கீகரித்து வாழும்நாள் வரும்வரை தமிழர்க்குத் துன்பமேதான்.

நேர்நோக்குப் பார்வையுடன் இந்த ஒன்றுபட்ட நிலை வரும் திசைநோக்கி உழைப்பவர்க்கு, எமது உடன்பிறப்புக்களுக்கு என் ஒரு கும்பிடு எப்போதும் உண்டு.

மாமூலன்



# பண்டைய தமிழர் வீரர்களைப் போற்றும் முறை

அலைமகள்



பண்டைய காலத்தில் தமிழர்கள் ஐந்து வகையான நிலச் சூழலில் வாழ்ந்தார்கள். இவற்றைப் பண்டைய தமிழ்ப் புலவர்கள் ஐந்து திணைகளாகப் பிரித்துப் பாடல்களில் பாடியுமுள்ளார்கள். சேர, சோழ, பாண்டிய பேரரசுகளும் பெருந்தொகை குறுநில மன்னர்களும் இந்நிலங்களை ஆட்சி புரிந்திருந்தார்கள். இயற்கையுடன் போராடவும், அரசு நடத்தவும் மனித சக்தி முக்கியமாக இருந்தது. இதனால் வெளி வாழ்க்கையில் வீரம் முக்கியமாகப் போற்றப்பட்டது.

வீரர்கள் தமது சொந்த வாழ்க்கை, குடும்பம் எனச் சிந்திக்காது ஒட்டுமொத்த சமுதாயம், நாடு என்ற அளவில் சிந்தித்தார்கள். தனது மக்களுக்கு துன்பம் நேரக் கண்டு பொறுக்க மாட்டாதவர்களாய் தன்னை வருத்திப் போர் செய்தார்கள். எதிரிகளிடமிருந்து பாதுகாப்பையும், அமைதியையும் மக்களுக்குப் பெற்றுக் கொடுப்பவர்களானார்கள்.

இதனால் மக்கள் இவர்களைத் தங்களில் ஒருவராக, காப்பவராகக் கொண்டாடினார்கள். கொண்டாடுகிறார்கள். ஒளி தருவதால் கதிரவனையும் பால் தருவதால் பசுவையும் வாழ்க்கை தருவதால் செய்யும் தொழிலையும் போற்றும் தமிழர் தங்கள் நன்றியறிதலையும் வழிபாடாக்கினார்கள்.

## "புலியிருந்த குகைபோல அவனை(ளை)ப் பெற்ற வயிறு"



வீரர்களும் பிறருக்காக தங்களைக் கொடையாக அளிப்பதால் இவர்களைப் போற்றும் மரபும் வளர்ந்தது.

இவ்வாறு வீரத்தைப் போற்றும் மரபு பண்டைய காலத்தில் உலகின் பல பாகங்களில் காணப்பட்டது. கிரேக்க, உரோம, எகிப்திய மக்களிடமும் கனடாவின் ஆதிக்குடி மக்களிடமும் வழக்கத்தில் உள்ளது. வயது வந்து நோய்வாய்ப்பட்டு இறப்பதைவிடவும் இளமையில் வீரனாக இறப்பதே மேலானது எனக் கருதப்பட்டது. இதைக் கூறும் நாட்டார் பாடல் கனடிய ஆதிக்குடிகளிடமும் வழக்கத்தில் உள்ளது.

இதே மரபை சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றில் காணலாம். எடுத்துக்காட்டாக புறநானூற்றில் கூறப்பட்டுள்ள சில செய்திகள் வருமாறு:

"குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்
ஆஅள் அன்று என்று வாளின் தப்பார்..."
(புறநானூறு 74)

இதனை சேரமான் கணைக்காலிரும்பொறை சிறைப்பட்ட பொழுது பாடியிருந்தார்.

குழந்தை இறந்து பிறந்தாலும் தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் அவற்றை வாளால் வெட்டியே புதைப்பார். இவ்வாறான மரபில் பிறந்த சேரமான் வீரத்துடன் போரிட்டு இறக்காது சிறையிருக்க வேண்டிய நிலையில் வெட்கித்து இருந்தார் என்கிறது இப்பாடல்.

"...நீள்கழல் மறவர் செலவுழிச் செல்கென
வாள்போழ்ந்து அடக்கலும் உயர்ந்தனர் மாதோ..."
(புறநானூறு 93)

வீரக்கழல் அணிந்த மறவர் இறக்க நேரின் வாளினால் உடலைக் கீறி அடக்கம் செய்வர் என ஔவையார் பாடியுள்ளார். ஒரு வீரரைப் பிள்ளையாகவோ துணையாகவோ உறவினராகவோ பெற்றிருத்தல் பெருமையாகப் பேசப்பட்டது.

"என்மகன் யாண்டு உளன் ஆயினும் அறியேன்
ஓரும் புலி சேர்ந்து போகிய கல்அளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"
(புறநானூறு 86)

உன் மகன் எங்கே என்று கேட்டதற்கு, "அவன் எங்கே சென்றான் என்று எனக்குத் தெரியாது. புலியிருந்த குகைபோல அவனைப் பெற்ற வயிறு உள்ளது. ஆனாலும் போர்க்களத்திலே வந்து தோன்றுவான். அவனை நீ அங்கு காண்பாய்" எனத் தாய் கூறுவதாக காவற் பெண்டு எனும் புலவர் பாடியுள்ளார். ஒக்கூர் மாசாத்தியார் ஒரு பெண்ணின் துணிச்சலைப் பாடியுள்ளார்.

..."மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தன் ஐ
யானை எறிந்து களத்தொழிந் தனனே
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்

பெருநிரை விலக்கி ஆண்டுபட்ட டன்னே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே"
(புறநானூறு 279)

முன்பு நடந்த போரில் இவள் தந்தை யானையை அடக்கி இறந்தார். நேற்றைய போரில் கணவனை இழந்தாள். இன்றோ இருக்கும் ஒரே சிறு மகனையும் தலைக்கு எண்ணெய் தடவி உணவு கொடுத்தபின் கையில் வேலைக் கொடுத்து போர்க்களம் அனுப்புகிறாள். பிறப்பதே நாட்டுக்காகப் போரிட்டு இறப்பதற்கு என்ற துணிச்சல் அன்று இருந்துள்ளது.

"எ.்குஉளம கழிய இருநில மருங்கின்
இருநில மருங்கின் அருங்கடன் இறுத்த பெருஞ்செ
யாளனை..." (புறநானூறு 282)

பாலை பாடிய பெருங்கடுங்கோ போர்க்களத்தில் வீழ்ந்து கிடந்த வீரனைப் பார்த்துப் பாடுகிறார். 'இவன் பிறந்த கடனை நாட்டுக்காகப் போரிட்டுத் தீர்த்துக் கொண்டான். நாலா திசையும் தன் புகழை நிறுவிவிட்டு புலவர்களின் வாய்மொழிகளில் நிலைத்துவிட்டான்' எனப் பாடியுள்ளார்.

நாம் வாழும் நிலத்தை ஐவகையாப் பகுத்த புலவர்கள் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என போருக்கான நிலையையும் ஐந்தாக வகுத்துள்ளனர்.

போருக்குச் செல்லுமுன் வேலன்-வீரன் காந்தள் மலரணிந்து வெறியாட்டு நிகழ்த்துவான். இது போருக்குச் செல்லும் முன்னர் நிகழ்த்தும் நடனவகையாகும்.

வெட்சித் திணையில் வீரர்க்குக் கல் நாட்டி வழிபடுவதைக் காணலாம். போர்க்களத்தில் இறந்து களம்பட்ட வீரர் நினைவாக கல் நாட்டுவர்.

"...காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்த மரபில் பெரும்படை வாழ்த்தலென்று
இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்
சொல்லப்பட்ட.." (தொல்காப்பியம்: புறத்திணையியல் 5)

வீரமரணம் அடைந்த வீரனுக்கு அவன்பெயரில் நடுகல் நட்டு எவ்வாறு வழிபடப்படுகிறது என்பதை தொல்காப்பியம் தெளிவாகக் கூறுகிறது. பொருத்தமான கல்லைத் தேர்ந்து உரிய இடத்தில் நாட்டுதல். நாட்டிய கல்லில் வீரனது பெயர், ஊர், புகழ் போன்றவற்றை எழுதுதல் போன்றன வழக்கத்திலிருந்ததாக தொல்காப்பிய நூலில் உள்ளது.

இவ்வாறான வழக்கத்தை புறநானூற்றுக் காலத்திலும் காணலாம். கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்து இறந்தபின் அவன் கொடைச்சிறப்பை பாடிய பொத்தியார், நடுகல்லாகிய பின்னும் எமக்கு இடம் தந்த கொடையாளன் என்கிறார்.

**இதயநோய்த் தாக்குதலில் இருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்ளச் செய்யவேண்டியவை:**

புகைத்தலில் இருந்து விடுபடுவது
நல்ல, சத்துள்ள, பழங்கள் , காய்கறிகள் கொண்ட கொழுப்பற்ற உணவு உட்கொள்வது, மற்றும் நல்ல உணவு முறை
இரத்த அழுத்தம் எவ்வளவு சரியாக இருக்கிறது என்று அறிந்து வைத்திருத்தல்.
உடற் பயிற்சி தரக்கூடிய செயல்கள்: விளையாட்டு, நடை போன்றன மிகவும் பயன்தரும்
முக்கியமாக ஓய்வுக்கு, மனத் தளர்ச்சிகளிலிருந்து விடுபடும் மகிழ்வான நேரங்களை ஒதுக்குதல்.

"...நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்
இடங்கொடுத்து அளிப்ப..." (புறநானூறு 223)

ஆவூர் மூலங்கிழாரின் பாடலில்
"..நடுகல் ஆகிய வென்வேல் விடலை..." (புறநானூறு 261)
என எல்லோருக்கும் அள்ளி வழங்கிய வீட்டிற்குரியவன் இன்று நடுகல்லாகி இருப்பதைப் பாடியுள்ளார்.

"...நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது
விருந்து எதிர் பெறுகதில் யானே என்ஐயும்
மோ...வேந்தனொடு நாடுதரு விழுப்பகை எய்துக
எனவே" (புறநானூறு 306)

என்ற பாடலில் போருக்குச் சென்ற என் கணவன் பகைவரை ஒழித்து மீண்டு வரவேண்டும், என் வீட்டிற்கு விருந்தினர்கள் வரவேண்டும் என நடுகல்லை வணங்கிய பெண்ணொருத்தி வேண்டிக்கொள்வதாக அள்ளூர் நன் முல்லையார் பாடியுள்ளார்.

இப்படி வீரர்களைப் போற்றும் முறை முன்னர் தமிழரிடம் இருந்துள்ளது. ■

## விண்வெளி வீரரின் யாழ் பயணம்!



முதன்முதலில் ஸ்புட்னிக் விண்வெளி ஓடத்தில் பூமியைச் சுற்றி வந்தவர் யூரிககாரின் என்ற உருசிய விண்வெளி வீரர். யூரிககாரின் அவர்கள் யாழ்ப்பாணத்திற்கு வந்தபோது அவருக்கு யாழ் மாநகரசபை மண்டபத்தில் பெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. அப்போது அங்கு யூரிககாரின் உரையாற்றினார். அந்த உரையினை கம்யூனிசுட்டுக் கட்சியின் முன்னோடிகளில் ஒருவரான திரு. வா.பொன்னம்பலம் அவர்கள் மொழி பெயர்த்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

[illegible] FOR SAKEN LAND இத்தமிழாக்கத்தை கைவிடப்பட்ட பூமி எனலாம். ஒரு இளம் சிங்கள சினிமாக் கலைஞனின் கனவின் வெளிப்பாடாக இத்திரைப் படம் உதித்திருந்தது. நல்லதொரு சினிமாவை உருவாக்க வேண்டும் என்ற அவனின் வாழ்வின் தேடல் இந்த இளம் கலைஞனுக்கு நல்ல தொரு திருப்தியையும் வெற்றியையும் இத் திரைப்படத்தில் கொடுத்தி

அட்டூழியங்களையும், அநீதிகளையும் உண்மைக்கு புறம்பாக மிகைப்படுத்தி சிங்களச் சினிமா பார்வையாளர்களை சிங்கள அரசுகளுக்கும், அந்த அரசு களின் இராணுவத்திற்கும் ஆதரவாளர் களாகவும், அபிமானிகளாகவும் ஆக்கு கின்றார்கள்.

ஆனால் சமீபத்திய ஒரு சில சிங்களத் திரைப்படங்கள் முற்றிலும் மாறுபட்ட விதத்தில் அரசியல் நிலை களையும், உண்மைகளையும் அப்பட்ட

கருத்தைக் கூறியிருக்கிறார். இந்தக் கலைஞன் இந்த சினிமா மூலமாக எதைக் கூற வருகிறார்?

குறைபாடும், அநீதியும், வன் முறைகளும் நிறைந்த சமூக அமைப்பு மீது இக் கலைஞனுக்கு ஏற்பட்டகோ பங்கள், வெறுப்புக்கள் அனைத்தையும் அப்பட்டமாக இப்படத்தில் வெளிக் காட்டுகின்றார். தன்னைச் சுற்றி வாழ்ந்து கொண்டிருக்கும் துயரம் மிக்க மனிதர்களின் மரணமும், விரக்தியும், வேதனைகளும், வறுமையும் இந்த மனிதர்களை இடைவிடாது கடந்து கடந்து

# பார்வையும் திறனாய்வும்



## ரொறன்ரோ திரைப்பட விழாவின் ஒரு சிங்களத் திரைப்படம்

ருக்கிறது.

இந்தச் சிங்களச் சினிமாக் கலைஞனின் பெயர் விமுத்தி ஜெயசுந்தரா. இந்த சிங்களக் கலைஞனது முதல் முயற்சியாக இத் திரைப்படம் உருவாக்கப்பட்டிருந்தது.

அதிகமான சிங்களச் சினி-மாக்கள் மரபுவழிச் சினிமாக் களிலிருந்து சற்று விலக்கியே உருவாக்கப் பட்டிருப்பதை சினிமா பற்றிய ஆழமான கருத்துடையவர்களுக்கு விளங்கும். சம காலமாக உருவாக்கப் படும் சிங்களத் திரைப்படங்களில் சமகாலத்து அரசியலையும், அரசியல் பிரச்சினைகளையும் துல்லியமாக வெளிக் கொணர்ந்திருக்கிறார்கள்.

இதைவிட அதிகளவான சிங்களச் சினிமாக்கள் சிங்களத் தேசியத்தின் பிரச்சாரத்திற்கு துணை போகின்ற சினிமாக்களாக உருவாக் கப்படுகின்றன.

இலங்கையின் இனப் பிரச்சினையை ஒரு பக்கசார்பாக அதாவது சிங்கள அரசுகள் புரிகின்ற இனவாத

மாக வெளிக்கொண்டு வந்துள்ளன. அந்த வகையில் விமுத்தி ஜெயசுந்தரா உருவாக்கிய சினிமாவும் அடங்கு கின்றது.

போர் என்ற அழிவினூடே சிங்களச் சமூகத்தின் வாழ்வின் நடப்பியல் உண்மைகளை அப்படியே காட்ட வேண்டும் என்ற அடித்தளத்தில் மிக எளிமையாக, ஆரவாரமின்றி, ஆடம்பர மான வண்ணக் வண்ணக் கலவைகள் இன்றி, செயற்கையான கவர்ச்சி இன்றி சினிமாவுக்கு அனுபவமில்லாத நடிகர்களைக் கொண்டு குறைந்த செல வில் சிறப்பாக இத் திரைப்படத்தை உருவாக்கியிருந்தார் ஜெயசுந்தரா.

வெறும் கற்பனைவாத சூழலி லிருந்து இனிமை விடுவித்த யதார்த்த மான உண்மையான மனித வாழ் வோடு இத் திரைப்படம் இணைந்தி ருந்தது. இத் திரைப்படத்தை உரு வாக்கிய கலைஞன் எந்தச் சமூகத்தில் பிறந்து வாழ்ந்து கொண்டிருக்கி றானோ, அந்தச் சமூகத்தின் ஒட்டு மொத்தமான எண்ணங்களையும், ஆவேசங்களையும் அதே சமூகத்தின் பிரதிநிதியாக நின்று நியாயமான ஓர்

செல்லுகின்றன. போர் என்ற அழிவும், அதன் அனர்த்தமும் தமிழ் மக்களுக்கு மட்டுமல்ல, ஒட்டுமொத்த சிங்களச் சமூகத்தையும் ஒரு மூடிய வாழ்க்கைக்குக் கொண்டுசென்று விட்டது. வன்முறைக்கு வழி விடாமல் அமைதிக்கு வழி விடுங்கள் என்று மறைமுகமாக இத் திரைப்படத்தின்



நான் விரும்பிற "அவரோட" தேத்தண்ணிக் கடையில இருக்கேக்கை அப்பா பாத்திட்டார்...
பிறகு
அவருக்கும் ஒரு தேத்தண்ணி வாங்கி குடுக்கவேண்டியதாப் போச்சு!

மூலம் கூறுகின்றான்.

காலம் காலமாக சிங்களச் சமூகத்தை வழி நடத்திச் செல்லுகின்ற மதவாதிகளும், பேரினவாதிகளும் ஒரு போதும் விலகாமல் ஒரே நேர் கோட்டில் இணைந்து செல்வதால் இலங்கை சுதந்திரம் அடைந்த காலம் தொட்டு இற்றைவரை சிங்களச் சமூகம் ஒரு மூடிய, இருள் படைத்த வாழ்க்கையை கொண்டிருக்கிறார்கள். இவ்வாறன இருள் படிந்த மூடிய வாழ்விலிருந்து சிங்களச் சமூகம் விடுபட முடியாத ஒரு இறுக்கமான சூழலை மதவாதிகளும், பேரின வாதிகளும் உருவாக்கி வைத்துள்ளார்.

புலம்பெயரிடத்தில் தொடர்ந்து நல்ல திரைப்படக் கட்டுரைகள் எழுதிவரும்

**பாலா**

தமிழ்ச் சமூகத்தை அடக்குகிறோம் என்று நினைத்துக் கொண்டு போரை வழி நடாத்தி செல்லுகிறார்கள். ஆனால் சிங்களச் சமூகத்தை 50 அல்லது 60 வருடங்கள் பின்நிலைக்குத் தள்ளி வைத்துள்ளார்கள்.

எந்த சமூகத்திலும் மத வாதிகளும் புரட்சி வாதிகளும் நேர் நோக்கில் இணைந்து செயற்படுவதன் மூலம் தமது சமூகத்திற்கு நல்ல விடிவையும், சுபீட்சத்தையும் பெற்றுக் கொடுப்பதோடு அந்தச் சமூகத்தை செம்மைப் படுத்தி, செழுமை அடையச் செய்கிறார்கள்.

சிங்களச் சமூகத்தைப் பொறுத்தவரை அன்றைய பொதுவுடமைப் புரட்சிவாதிகளும் இன்றைய பேரினவாதிகளாக மாறி மதவாதிகளுடன் இணைந்து விட்டார்கள். போர் ஒழிந்து அமைதி தோன்றும்போது தான் சிங்களச் சமூகம் நல்லதொரு சுபீட்சத்தைப் பெறும் என்று மறைமுகமாக இத்திரைப்படத்தில் கூற வருகின்றார் ஜெயசுந்தரா.

இத்திரைப்படத்தின் கதை அதிக உரையாடல்கள் இன்றி, அமைதியாக ஒவ்வொரு சம்பவத்தையும் பார்வையாளர்கள் ஊகித்து அறியும் படியாக உருவாக்கப்பட்டிருக்கிறது. காட்டப்படும் சம்பவங்கள் ஒன்றொன்றாக காட்டப்படுகிறது என்பதை ஒவ்வொரு பார்வையாளனும் தனக்குள் சிந்திக்கும்படியாகச் சம்பவங்கள் காட்டப்படுகின்றன.

மனித வாழ்வின் அகபுற சலனங்களையும் அந்த வாழ்வை மூடி நிற்கின்ற அசிங்கமான கசப்பான உண்மைகளையும் ஒளிவுமறைவுமின்றி அப்பட்டமாக சித்தரிக்கப்பட்டிருக்கிறது. நடிப்பவர்கள் நிர்வாணமாக நடமாடி நடிக்க வைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆங்காங்கே பாலியல் உறவுகள் அப்பட்டமாக காட்டப் பட்டிருக்கின்றது. மனித வாழ்வின் இறுக்கத்தில் சிக்குண்டு சிதைந்து அழிந்து கொண்டிருக்கின்ற அந்த மனித வாழ்வின் உண்மையான நடப்புகளையும், அனுபவங்களையும் நிஜ வாழ்க்கையிலிருந்து பெயர்த்தெடுத்துக்



காட்டியிருக்கின்றார் இந்தக் கலைஞன்.

இரண்டு மணி நேரங்களுக்கு பார்வையாளர்களை சலனம் கொள்ளும்படியாக சம்பவங்களையும், பாத்திரங்களையும் திரும்ப திரும்ப நினைக்கும் படியாக சில இடங்களில் அமைதியாகவும், சில இடங்களில் வேகமும் கொண்டு ஓடியது இந்த சிங்களத் திரைப்படம்.

ஒரு புதிய குடியேற்றத் திட்டத்தில் கரிசல் காடுகள் நிறைந்த கிராமத்தை கமரா தனது கோணங்களுக்குள் பற்றிக் கொண்டது.

ஒரு காலைப் பொழுதின் விடியலுடன் இந்தத் திரைப்படம் தொடங்குகிறது. ஒது பெண் படுக்கையில் இருந்து எழுந்து பார்வையாளர்களுக்கு பின் முதுகு காட்டி தலைமுடியை கையால் கோதிப்பிடித்து கொண்டை போட்டு விட்டு கட்டிலால் எழுந்து நடக்கிறாள். இன்னும் ஒரு இளம் பெண் தன் கணவனுக்கு ஓரமாக படுத்திருந்து விட்டு எழுந்து செல்கிறாள். எழுந்து சென்றவள் நீரால் நிரப்பப்பட்டிருந்த வாளியிலிருந்து நீரையெடுத்து தனது கையினாலேயே தனது முகம் கை கால்களைக் கழுவுகின்றாள். நீர் கைகளால் அள்ளப்படும் சத்தத்தைத் தவிர வேறு எந்த ஒலியும் இத் திரைப்படத்திலிருந்து வரவில்லை. நீண்டநேரம் அப்பெண் கைகளால் தனது அங்கங்களை கழுவுகிறாள்.

ஒரு மனிதன் வீட்டுக்கு வெளியே விரைவாக நடக்கிறான். கையில் ஒரு தண்ணீரால் நிறைக்கப்பெற்ற பாத்திரம். இந்த மனிதன் நடக்கும் கால் ஓசையின் சத்தம் பார்வையாளர்களின் காதுகளை ஊடறுத்துச் சென்று கொண்டிருந்தன. அந்த மனிதன் கதவில்லாத மலசலகூடத்தினுள் நுழைகின்றான்.



அந்த மலசலகூடத்தின் கதவு கழன்று ஓரமாகச் சாத்தப்பட்டிருந்தது. மலசல கூடத்திற்குள் நின்றபடியே கதவைத் தூக்கி மலசலக்கூட வாசலை மறைக்கிறான். மலசலக்கூடத்தின் ஓரமாக ஒரு மண்மேட்டில் மரத்தில் சாய்ந்தபடி ஒரு பெண் எதையோ எதிர்பார்ப்பவள் போல் நிற்கிறாள். அப்பெண்ணின் முகம் வெறுமைப் பட்டிருக்கிறது. காலைக் கடன் கழிக்கச் சென்ற மனிதன் மலசலகூடத்திலிருந்து வெளி வருகிறான். மண்மேட்டில் மரத்தில் சாய்ந்து கொண்டிருக்கும் அப் பெண்ணை ஒரு கணம் நோக்குகிறான். ஒரு கணம் நிற்கிறான். ஏதோ பேச வாய் எடுத்துவிட்டுப் பேசாது நடந்து செல்கிறான். அந்த மனிதன் அந்தப் பெண்மீது பரிவுகொள்கிறான் என பார்வையாளர்களால் உணரமுடிகிறது.



ஒரு இளம் பெண் வீட்டிலிருந்து அவசரமாக நடந்து செல்கிறாள். மலசலகூடத்தை தாண்டி நடந்து மண்மேட்டில் ஏறி, இறங்கி நடந்து செல்கிறாள். இப்பெண் அங்கே அதிக நேரமாக மண்மேட்டு மரத்தில் சாய்ந்திருக்கும் பெண்ணை ஏறெடுத்து பார்க்கவில்லை. அந்தப் பெண்ணில் வெறுப்புக் கொண்டவள் போல் அவளின் முக உணர்வுகள் காட்டுகின்றன. அந்த வீட்டில் வசிக்கும் அந்த இளம் பெண்ணும் ஆணும் கணவன் மனைவி. அங்கு வெறுமையும் விரக்தியும் அடைந்து காணப்படும் 40-50 வயது மதிக்கத்தக்க பெண் அந்த ஆணின் சகோதரி, திருமணம் ஆகாதவள்.

இவர்கள் மூவரும் இந்தத் திரைப்படத்திற்கு முக்கிய கதாபாத்திரங்கள் வறுமையில் வாடுகின்ற எல்லைக் கிராமக் குடியேற்ற சிங்கள மக்கள் வாழுகின்ற கிராமத்தைச் சுற்றியே இத்திரைப்படம் உருவாக்கப் பட்டிருக்கிறது. வறண்ட நிலங்கள், மேடுகள், பள்ளத்தாக்குகள். பள்ளத் தாக்குகள் நீரினால் நிரம்பி வழிந்து ஓடிக் கொண்டிருக்கிறன. வறண்டு போய் இலை உதிர்ந்து நிற்கும் காயா மரங்களும், கரம்பைப் பற்றைகளும். இப்பற்றைகளை ஊடறுத்துச் செல்லும் ஒற்றையடிப் பாதைகளும் கிறவல் வீதிகள்.

இந்த கிறவல் வீதிகளில் இராணுவ வாகனங்கள் ஊர்ந்து செல்லும். கிறவல் வீதியோரமாக வருடக் கணக்காக, ஊரைப் பாதுகாத்துக் கொள்ள உழைக்கும் கறுத்து, இழைத்துப் போய் இருக்கும் ஒரு சிங்கள ஊர்காவல் படை மனிதன் தனிமையாக துப்பாக்கியை ஏந்தியபடி குந்தியிருந்து கொண்டு நடந்து நடந்து தேய்ந்துபோன பாதங்களிலிருந்து வடியும் இரத்தக் கறையை துடைத் தெறிந்து கொண்டிருக்கிறான்.

இடையே இடுப்பில் செருகி வைத்திருக்கும் சிறு மதுபான போத்தலை அண்ணாக்காக வாயில் ஊற்றிக் கொண்டிருக்கிறான்.

இந்த ஊர்காவல் படை மனிதனும் இத்திரைப்படத்தில் முக்கிய பாத்திரம். இங்கே முதல் கூறப்பட்ட குடும்பத்து மனிதனும் இந்த வயது முதிர்ந்த மனிதனுமே இந்த ஊரைப் பாதுகாக்கும் ஊர்க்காவல் படையினர்.

இராணுவ ட்ரக்குகள் வரும் போது ஊர்காவல் படையினர் இருவரும் எழுந்து நின்று மரியாதை செலுத்த வேண்டும், இராணுவம் இடும் கட்டளைகளை மறுக்காது ஏற்றுக் கொள்ள வேண்டும். இராணுவத்தினர் ஊர்காவல் படையினரை ஒரு துரும்பாகக் கூட மதிப்பதில்லை. ஊர்காவல் படையினரைக் கண்டால் கேலியும், கிண்டலும் செய்வது வழமை.

இங்கு குடும்பத்தினனாக காட்டப்படுகின்ற ஊர்காவல் படை மனிதனையும் ஒரு தடவை இராணுவத்தினர் ட்ரக் வண்டியில் ஏற்றிச் சென்று அவனை நிர்வாணமாக்கி, கேலியும், கிண்டலும் செய்து கூத்தடித்து விட்டு ஒரு நீர் நிறைந்த பள்ளத்தில் தூக்கிவீசிவிட்டு போகின்றார்கள். நீரில் நிர்வாணமாக கிடக்கும் மனிதனின் மனம் புண்படுவதையும், அவன் நிர்வாணமாக கரையேறி தன் வீட்டை நோக்கி பதுங்கி ஓடுவதும் காட்டப்படுகின்றது. போர் ஏற்படுத்திய சூழல் சிங்களச் சமூகத்தை ஊமையாக்கியிருக்கிறது. தன் இனத்திற்கே தான் பயந்து வாழவேண்டிய சூழல். தமது வயிற்றுப் பிழைப்புக்காக மனித நேயத்தையும், மனச்சாட்சியையும் விற்றுப் பிழைப்பு நடத்தவேண்டிய சூழ்நிலையை இப் போர் ஏற்படுத்தியிருக்கின்றது.

தமிழ்ப் பகுதிகளில் கைது செய்யப்படும் இளைஞர்கள் காணாமல்

நாளிதழ் செய்தி

### உலகப் படவிழாவில் இலங்கைப் படத்துக்கு விருது

தாய்லாந்து நாட்டில் பாங்காக் 3-வது உலகப்படவிழா பாங்காக்கில் நடந்தது. இதில் இந்தப் படத்துக்கு விருது கிடைத்தது. இந்த படத்தை 28 வயது விமுக்தி ஜெயசுந்தரா இயக்கி இருந்தார். அவருக்கு விருது வழங்கப்பட்டது. இந்தப்படத்துக்கு கான் பட விழாவிலும் விருது கிடைத்தது.

போவதை பார்வையாளர்கள் ஊகித்து அறியும்படியான சம்பவங்கள் இத்திரைப் படத்தில் காட்டப்பட்டிருக்கின்றன.

ஒரு சம்பவத்தை இங்கே தரலாம். தமிழ்ப் பகுதியில் கைது செய்யப்பட்ட இளைஞன் ஒருவன் சாக்கினால் மூடிக் கட்டப்பட்டிருக்கிறான். அவன் அதற்குள் திமிறிக் கொண்டிருக்கின்றான். அவர்களைப் பொறுத்தவரை இளைஞன் அடித்து கொல்லப்பட வேண்டும்.

இராணுவத்தினர் ஒரு ஊர்க்காவல் படை மனிதனை அழைக்கிறார்கள். அதாவது குடும்பமாக வாழுகின்ற ஊர்காவல் படை மனிதனை அழைத்து அங்கு சாக்கினால் கட்டப்பட்டு திமிறிக் கொண்டிருக்கும் அந்த தமிழ் இளைஞனைக் கொல்லும்படி அவனிடம் கூறுகின்றனர்.

மறுப்பு கூற முடியாத அந்த ஊர்காவல் படை மனிதன் ஒரு கனமான தடியினால் மண்டையில் அடித்துச் சிதற வைத்துக் கொல்லுகிறான். கொன்ற பின்பு அந்த மனிதன் தனது மனச்சாட்சிக்கு, தனது மனிதாபிமானத்திற்கு மண்டியிடுகிறான். அவன் தான் ஒரு மனிதனாக உணரமுடியாது துடிக்கிறான். இந்த நரக வாழ்வின் இறுக்கத்தில் சிக்குண்டு சிதைந்து கொண்டிருக்கும் இந்த ஊர்காவற் படை மனிதனின் அக மன உணர்ச்சிகளின் வெளிப்பாடுகளை பார்வையாளர்கள் ஊகித்து அறியும்படியாக அற்புதமாகப் படமாக்கியிருக்கிறார்.

ஒரு கர்ப்பிணிப் பெண் வறுமையின் கொடுமையால் தனது உடலை விற்றுப் பிழைப்பு நடத்தி இறுதியில் மரணத்தைத் தழுவுகிறாள். மரணமடைந்த அப்பெண் அநாதவரற்று தெருவோரத்தில் கொண்டு வந்து போடப்படுகிறாள். அவ்வுடல் மழையில் நனைந்து கொண்டிருக்கின்றது. அந்த ஊர் பெரியதாக அலட்டிக் கொள்ளவில்லை. அந்த ஊர்காவல் படை மனிதன் மட்டும் அந்த இறந்த உடலை எண்ணி மனம் வருந்துகின்றான். ஓடிச் சென்று அந்த உடலை மூடிவிடுகின்றான்.

இத்திரைப்படத்தில் மனித வாழ்வின் உண்மை நடப்புகள் துண்டு துண்டாகக் காட்டப்பட்டாலும் இத் திரைப்படத்திற்கு ஓரமாக ஒரு கதையும் இருக்கிறது.

ஒரு இளம் பெண் - அவளின் கணவன் ஒரு ஊர்காவல்படை. இந்த ஊர்காவல்படை மனிதனுக்கு ஒரு சகோதரி அவர் வயது வந்தும் திருமணம் ஆகவில்லை. திருமணத் திற்கான ஏக்கம், எதிர்பார்ப்பு எல்லாம் அவளை ஒரு விரக்தியின் விளிம்பிற்குத் தள்ளிவிட்டது. தனது சகோதரிக்கு திருமணம் ஆகும்வரை தனது மனைவியுடன் உடல்ரீதியான உறவை வைத்துக் கொள்ள மாட்டேன் என்ற கொள்கை கொண்ட மனிதன் தனக்கு தானே சத்தியம் செய்து கொண்டு சத்தியத்தைக் காப்பாற்றிக் கொள்கிறான். திருமணம் ஆகியும் உடல்ரீதியாக உறவு இல்லாத மனைவியின் அடக்கப்பட்ட ஆசாபாசங்கள் இறுதியில் ஒரு இராணுவச் சிப்பாயுடன் உடல்ரீதியான தொடர்பை வளர்க்கிறாள்.

இராணுவச் சிப்பாய் அடிக்கடி அந்தப் பெண் வீட்டிற்கு வந்து போகின்றான். இது ஒரு நாள் பிடிபடுகிறது. அதாவது அப்பெண்ணின் கணவனின் சகோதரி கண்டு விடுகின்றாள். தனது மைத்துனி தவறிழைப்பதற்கு தான்தான் காரணமாக இருந்து விட்டேன் என்று மனம் வருந்துகின்றான். இறுதியில் தற்கொலை செய்ய முடிவு செய்து ஒரு மரத்தில் கயிறு மாட்டி மரணிக்கிறாள்.

இத்திரைப்படத்தில் இந்தக் கலைஞன் இரண்டு விடயங்களை கூறிச் செல்கிறான். சமூக மட்டத்தில் நிலைகுலைந்து போய்க் கிடக்கின்ற சாதாரண மனிதர்களின் துயரங்கள் சுட்டிக் காட்டப்பட்டிருக்கின்றன. மற்ற விடயம் போர் என்ற அழிவினூடே மனித விழுமியங்கள் சிதைக்கப்பட்டு விட்டன. வன்முறைகளும், நெருக்கடிகளும் துயரமும் நிறைந்த காலகட்டமிது.

மனித சமூகத்தின் உயர் கோட்பாடுகள் முற்றிலுமாக அழிந்து மனித வாழ்க்கையை பொருளற்றதாக்கி விட்டது. இவ்விரண்டு விடயங்களையும் மிக ஆணித்தரமாக கூறியுள்ளான் இந்தக் கலைஞன்.

தமிழருடைய பழைய தமிழ் நூல்களிலே சிறப்பான இலக்கண நூல் தொல்காப்பியம். இது தொல்காப்பியனாரால் எழுதப்பட்டது. சிலர் இதை சங்ககாலத்திற்குரியது எனவும் பலர் சங்கத்திற்குப் பிற்பட்ட சங்கமருவிய காலத்திற்குரியது எனவும் விவாதிப்பர். எதுவாயினும், மொழிக்கும் கலைக்கும் வாழ்வுக்கும் ஒரே நேரத்தில் இலக்கணம் கூறும் நூல் என்பதே இதன் உயர் சிறப்பு. பழந்தமிழர் வாழ்வியல் பற்றி அறிய படிக்க வேண்டிய நூல்.

எழுத்து, சொல், பொருள் எனும் மூன்று அதிகாரங்களைக் கொண்டது. ஆனாலும் இதை இன்றுவரை படிப்பதற்கு ஏற்றவாறு உரை எழுதிய இளம்பூரணார், சேனாவரையார், பேராசிரியர், நச்சினார்க்கினியாரும் போற்றப்பட வேண்டியவர்கள். தமிழின் வாழ்வை அன்றே பதிவாக்கிய தூரநோக்காளர்கள் இவர்கள்.

# அப்பு மப்பு

## அதிர அரட்டையில் வெறும்பாண்டி

காலயில ஒம்போது மணி அப்பு போறான் கடயத் தெறக்க. மப்பு நின்னுக்கிட்டிக்கான். மப்போட, கதவைத் தூக்க ஒரு கையக் குடுத்துக்கிட்டே அப்புட்ட,

"ஏம் மாப்ள இவ்ளோ லேட்டு?"

"ஆமா இங்க அவனவன் காலயில போன் போட்டு புஷ்ஷிகிட்டப் பேச வரிசையில நிக்கான். நீ வேற இதென்ன ஒயின் ஷாப்பா காலங்காத்தால ஒன்னமாரி ஆளுங்க வருவாங்கன்னு தெறந்து வைக்க?"

"ஒயின் ஷாப்பான்னு கேட்ட சரி, அதுக்காக புஷ்ஷி கிஷ்ஷின்னுட்டெல்லாம் பேசாத ஆமா... அவனே உரு தூக... காலங்காத்தால அவன்ட்ட பேசுற அளவுக்கு இங்க எவனும் சட்டயக் கிழிச்சிட்டா அலையுறான்"

"எக்ஸ்யூஸ் மி சார்" டை கட்டின ஒருத்தர் வந்து, "சார் ஒரு ஒபீனியன் போலுக்காக வந்திருக்கேன் சார்."

"ஒப்பீனியன் போல்னா? இன்னா?" அப்பு கேட்டான்.

"கருத்துக் கணிப்புசார்."

"கருத்துக் கணிப்பா?"

"காலையில கொஞ்சம் சும்மாருக்கியா? சொல்லுங்க தம்பி!"

"மாப்பிள வேண்டாம்... ஏதாவது சொல்லிட்டு செருப்படி, விளக்குமாத்துப் பூசைன்னு பட நமக்கு குஸ்பக்கா மாதிரி தடிச்ச தோல் கெடயாது" இது மப்பு

"நீங்க சொல்லுங்க தம்பி"

"எஸ்டீடி கடைக்கு போஸ்ட் பெய்டு லைன் நல்லதா? ப்ரீபெய்டு நல்லதா சார். நீங்க எது சார் யூஸ் பண்றீங்க,"

அப்பு வெறியாயி...

"எஸ்டீடி பூத் வச்சிருக்கவன்லாம் திறந்து போட்டு ஓடலாமா மூடிட்டு ஓடலாமான்னுட்டு மண்ட காஞ்சி போயிருக்கானுவ. நீ வேற... காலயில.... ஒங்களுக்குல்லாம் வேற வேலயே இல்லியா நல்ல படியாச் சொல்லுறன் போயிருப்பா"

டை பார்ட்டி மெரண்டு ஓடுறார்.

"நல்ல வேள மாப்ள வெரட்டுனே. அப்புறம் அவன் குஸ்பக்காட்ட கேட்ட மாதிரி ஏடா கூடமா கேட்டு ஏதாவது எக்குத்தப்பா ஆயிருமோன்னு பயமாப் போச்சு."ன்னான் மப்பு.

"ஏன் குஸ்புட்ட கேட்டதுலயும் அவா பதில் சொன்னதிலயும் என்ன தப்பு? அவ கருத்தச் சொல்ல அவளுக்கு உரிமயில்லியா?"

"அதுல்லாம் தப்போ சரியோ ஆனா இதமாரி கேட்டுகிட்டு கருத்துச்சுதந்திரம், அது இதுன்னுட்டு பேசிட்டு அலையுறாங்களே மாலன், ஞானி, அ மார்க்சு டாகிப்பட்ட வனுகள இரண்டு அப்பு அப்பாம விட்டது தான் தப்பு."

"இவனுங்களெல்லாம் அவ அவன் பொண்டாட்டி பிள்ளயிட்டப் போயி இதையே கேக்கச் சொல்லணும் அப்பத் தெரியும் கருத்துச் சுதந்திரமும், கழுதக் குட்டியும்"

"காலயில ஆரம்பிச்சிட்டியா?"

"ஆமா, அதென்ன அ மார்க்சு?"

"இது தெரியாதா? தர்மம் அதர்மம் நீதி, அநீதி மாரி மார்க்சு அமார்க்சு!"

"என்ன எளவோ, காலையில எமக்கு எதுக்கு அந்தக் கரும முல்லாம்? விசயத்துக்கு வா.. குஸ்பு சொன்னதுல என்ன தப்பு?"

"அவா அனுபவத்தில் தெரிஞ்சுக்கிட்டதத் தான் சொல்லிருக்கா. ஆனா அதுக்காக எல்லாத் தமிழ்ப் பெண்களத் தன்ன மாரியும்" இடைமறித்து ...

"எல போதும் நிறுத்து... இது என்னெயும் கோர்ட்டுக்கு அனுப்ற வழிதாம்ல"

"இல்லப்பா.. குஸ்பக்கா சொன்னது பாதுகாப்பான ஒறவப்பத்தி"

" ஓகோ...ஒருவேள அந்த நேரத்தில பாதுகாப்பு இல்லியோ என்னமோ?"

"என்னப்பா இதுக்குல்லாமா போலிஸ் பாதுகாப்பு குடுப்பாங்க?"

" போலீசாவது பாதுகாப்பாவது... மவனே லாட்ஜில எவ மாட்டினாலும் போலீஸ் விடாது மாமு..."

"அட எளவெடுத்தவனே... இது வேற.... இத பாரு மாப்ள பாதுகாப்புன்னா கர்ப்பமாகாம இருக்க

---

தொழில்முறை வரைகலைஞனாயிருந்த ஃபியடொர் டோஸ்தோயெவ்ஸ்கி தான் முழு நேர எழுத்தாளராக வரவேண்டும் என்பதற்காக அந்தத் தொழிலைவிட்டுவிட்டார். குற்றமும் தண்டனையும் என்ற உலகப் புகழ்பெற்ற நாவல் இவருடையதே. கடைசியாக ரஸ்ய உளவுப் பிரிவினால் சைபீரியாவுக்கு அனுப்பப்பட்டு சாகடிக்கப்பட்டார். 'முட்டாள்', 'கரமசோவ் சகோதரர்கள்' என்பன இவருடைய மற்றைய சிறந்த நாவல்களாகும்.

"அது எப்படி பாதுகாப்பு?"

"அப்பத்தான் கள்ள உறவு பத்தி பின் உறவுக்குத் தெரியாம இருக்கும்"

"எனக்கென்னமோ அவனுக்கட்டுருந்து இவளுகளுக்குப் பாதுகாப்பா? இவளுகட்டுருந்து அவனுகளுக்குப் பாதுகாப்பான்னு கொழப்பமாருக்கு"

"யாரு யாரை ஏமாத்து தாங்களோ... பாதுகாக்கெறாங்களோ...அத்தவிடுப்பா"

"இருந்தாலும் தமிழ் நாட்ட நம்பி பொழைக்க வந்த பொண்ண இப்படி கேவலமாப் பேசாத"

"அதென்னடாது ஆ ஊன்னா எல்லாரும் பொழைக்க...தூ...க்குன்னு தமிழ் நாட்டுக்குக் கௌம்பிர்றாங்க"

"எல்லாரும்னா யாரச் சொல்லுத"

"அதாம்பா ரஜனிலருந்து குஸ்பக்கா வரைக்கும் எல்லாரும் இதத்தான் அளக்காங்க. இவ என்னடான்னா நாந் தமிழ் நாட்டு மருமகங்கா. அவன் என்னடான்னா தாய்ப்பாலு தமிழ்ப்பாலு குடிச்சன்னு ஔறுறான். ஒருவேளை சென்னை பார்க் ஷெராட்டன்ல அடிச்ச தண்ணியத்தான் தமிழ்ப் பாலுங்கானோ?"

"அதயும் அவனுக்கு எழுதிக் கொடுக்க எசுரான்னு ஒரு கருங்காலி... வுட்டான ரஜினிதான் ராஜராஜ சோழன் பேரன்று எழுதீக்கான்"

"ஏன் துட்டுக்கொடுத்தா
காமத்துல சூரன்டா நான்...
கரிகால சோழன் பேரன்டான்னு... கமலகாசனுக்கு எழுத மாட்டானா?...
அது கெடக்கட்டும் நீ ரூட்டு மாறாம குஸ்பு விசயத்துக்கு வாப்பா"

"அடப் போப்பா என்னமோ எக்ஸ்ட்ரா டிக்கட் எடுத்து வச்சிருக்க மாரி கட்டாதே. இனிம அதப்பத்தி பேச ஒண்ணுமில்லப்பா"

"பொழக்க வந்த பொண்ணு ஏதோ தொழில் நடத்தட்டும் பொழைக்கட்டும் வேண்டாங்கல. அத விட்டுட்டு தமிழ் பொண்ணுங்க இப்படி. தமிழ் ஆணுங்க இப்படின்னு பேசுனா அவ்ளதான். அழகி கைதூன்னு பேப்பர்ல வரவேண்டியவளுக்கெல்லாம் கோயில் கட்டினானுங்களெ. இனிமயாவது புத்தி வருதான்னு பாப்பம் இந்த தமிழங்களுக்கு."

"ஒருவேளை அதுக்குத்தான் சுகாசினி மேடம் ஒட்டுமொத்த தமிழர் சார்பில மன்னிப்புக் கேட்டாளோ?"

"என்னது தமிழர் சார்பாவா? அவளுக்கும் தமிழினத்துக்கும் என்னடா தொடர்பு?"

"அட என்னப்பா? அவளுக்கு பரமக்குடி தான். அவ தமிழ்ப் பொண்ணு இல்லியா,"

"அடப் போடா இவன்! கைபர் போலன் வழியா வரித plug & wire க்கும் தமிழினத்துக்கும் என்னடா சம்மந்தம்?"

"பெறவு எப்பிடி அவா நான் தமிழச்சி, தமிழ்நாட்டுக் காரிங்கா?"

"அவங்களுக்கு என்னடா... வந்தா வந்த எடம் போனா போன எடம்"

"அது என்னமோப்பா குஸ்புவ மெரட்டுனமாரில்லாம் சுகாசினிய மெரட்ட முடியாது தெரிஞ்சுக்கோ. குஸ்புட்ட கேட்டத என்ட்ட கேட்டிருந்தா கிழிச்சிருப்பன்னு சொல்லிருக்கா"

"ஆமா இவா ஆந்திரால கிழிச்ச கிழி தெரியாதா? இங்க தமிழ்ப்பட்த்துல குடும்பப் பொண்ணு புரட்சிப் பொண்ணு ஆனா தெலுங்கில தெறம தெறம காட்டுனவதான்"

"அடப்போப்பா நீ வேற அவா நல்லநாள்லலேயே நடிக்வே வந்திருக்கவேணாம்...இதில போயி என்னத்தக் காட்ட முடியும் தெறம?"

"நமக்கு என்னப்பா தெரியும் ஆந்திராக் காரனுகளத்தான் கேக்கணும். என்ன வெசயமுன்னுட்டு"

"ஆனா துணிச்சல் காரப்பொண்ணுப்பா தமிழங்களுக்கு ரெண்டு கொம்பா மொளச்சிக்குன்னுல்லாம் பேசிருக்காள"

"ஆமாமா 20 பாட்டில் பீர் அடிச்சிட்டு மணிரத்தினம் முதுகெலும்ப ரிப்பேர் பார்தப்பவே அதோட துணிச்சலைப்பத்தி பேசிக்கிட்டாங்கப்பா எல்லாரும்"

"அதுல்லாம் அவங்க தனிப்பட்ட வாழ்க்க அதுல்லாம் பேசக் கூடாது"

"ஆமடா, அவங்கள்லாம் பேசுனா கருத்துச் சொதந்திரம். நாம் பேசுனா மட்டும் தனிப்பட்ட வாழ்க்க...அத்துமீறல் என்ன?"

சட்டென்னு மேடை நடையில்,

"என்னை என்ன பரமக்குடிக்கு அனுப்பி விடுவார்களா எனக் ஏகத்தாளமாகக் கேட்டும் வாய்க் கொழுப்பெடுத்த, சாதித்திமிர் பிடித்த சுகாசினியே! உலகெங்கும் வாழும் தமிழர்கள் உன் படங்களையும் உன் தொழில் நண்பி குஸ்பக்காவின் படங்களையும் உன் அறிவுஜீவி கணவன் மணிரத்னம் படங்களையும் எந்த மூலை முடக்கிலும் திரையிட விடாமல் தடை செய்து.... (இடையில் சிறிது மூச்சு வாங்கிக் கொள்கிறார்) உன்னைப் பரமக்குடியில் கூட முடங்கவிடாது விரட்டியடித்து தங்களுக்கு ஏற்பட்ட இழுக்கை நீக்க தமிழினம் முடிவு செய்து விட்டது என்பதை அறிந்து கொள்.

## 30 மார்க்குடன் வளர்ந்த ஜேர்மன் நிறுவனங்கள்!

இரண்டாவது உலகமகாயுத்தத்துக்குப் பிறகு ஜெர்மனியின் பிரதான நகரங்கள் எல்லாம் மண்ணோடு மண்ணாகப் போய்விட்டன. அவ்வேளையில் குடிமக்கள் எவரிடமும் சீவிப்பதற்கு காசே இருக்கவில்லை. யுத்தத்தின்போது மகா அழிவு ஏற்பட்டதல்லவா?

அதற்குப் பின்பு வந்த அரசாங்கம் ஒவ்வொரு குடிமகனுக்கும் 30 டொச் மார்க்குகள் கொடுத்து, இதை வைத்துக்கொண்டு நீங்கள் உங்கள் வாழ்க்கையைக் கட்டியெழுப்புங்கள் என்று கூறியது.

அப்படிக் கட்டியெழுப்பிய நாடுதான் யேர்மனி. இப்போது அது ஐரோப்பிய நாடுகளுக்குள் ஒரு வல்லரசாக வளர்ந்துவிட்டது.
ஐரோப்பிய ஒன்றியம் வரவேண்டும் என்று விரும்பிய நாடும் யேர்மனிதான். அந்தக்காலத்தில் 30டொச் மார்க்குகளை வைத்து வளர்ந்த நிறுவனங்கள்தான் வோக்ஸ்வகன், மெசிடிஸ் பென்ஸ், சீமென்ஸ்.. இப்படி எத்தனையோ இன்று உலகளவில் முன்னரங்குகளில்...

அப்போது தெரியும் உனக்கு தமிழர்களுக்கு முளைத்திருக்கும் கொம்பு ஒன்றா இரண்டா என்று. தமிழரின் உழைப்பில் பிழைப்பை நடத்தி, அதில் வளர்த்த கொழுப்பெடுத்த தடித்த நாக்கினால் அதே தமிழர்களை என்ன வேண்டுமானாலும் பேசலாம் என எண்ணும் உன்னைப் போன்ற நடிக நடிகைகளுக்கு பாடம் கற்றுக் கொடுக்கத் தமிழினம் முடிவெடுத்து விட்டது என்பதை இந்த கூட்டத்தின் வாயிலாக தெரிவித்துக் கொள்கிறேன்."

அப்பு படபடவென கை தட்ட ரமணி ஒரு சோடா உடைத்துக் கொடுத்தான்.

இதைப்பாத்து மொறைச்ச மப்பு "நான் என்னிக்குடா சோடா மட்டும் குடிச்சிருக்கேன்"

"அப்பு ஆமா மாப்ள திருமணத்துக்கு முன்பு உறவு வச்சிக்கிடுததப்பத்தி நீ என்ன நெனக்க?'

"அடப்போடா அவ அவன் திருமணத்துக்குப் பின்னாலயே பொண்டாட்டிய பாத்தா என்னமோ விஜயகாந்தப் பாத்த தீவிரவாதி மாதிரி...இன்னும் தெளிவாகச் சொல்லணும்னா சுகாசினியப் பாத்த மணிரத்தினம் மாதிரிப் பம்முதான். இதுல... முன்னால ஒறவு பின்னால ஒறவுண்ணுட்டு"





**ஈழத்து மாவோவும் கோசிமின்னும் இன்னமும் போராட்டக்களத்தில் வன்னி காடுகளில்தான் இருக்கின் றார்கள்.**
**அவர்களின் இலக்கியப் படைப்புக்கள் வெளிப்பட காலம் வழிவிடும் வரை காத்திருப்போம்.**

– மக்கள் கவிஞர் இன்குலாப்

# கடன் வாங்கி.... செய்யலாமா?

தமிழர்கள் புலம்பெயர்ந்து வெளி நாட்டுக்கு வந்ததால் வந்த வினைகள் பல

அவற்றில் குறிப்பிடத்தக்க ஒன்று ஆடம்பரமான குடும்ப விழாக்கள். இன்னும் ஒன்று பணம் தந்த பைத்தியம். கடன் வாங்கி, கடன் வாங்கி, திருப்பி கட்டமுடியாத நிலையில், தொலை பேசியில் நாளுக்கு நாலுமுறை அழைத்து, நாயும் கேளாத முறையில் திட்டி, கடனைத் திரும்பப் பெற முயற்சிக்கும் பணம் அறவிடுவோருக்கு பயந்து தொலைபேசி மணி அடிக்க தொடங்கும் நடுக்கம், வாசல் படியில் நிழல் தெரிய வலிப்பு நோயாக உரு மாறி, காலப்போக்கில் இதயநோயாகி, பைத்தியமும் இதயநோயும் முற்றி, காலமாகி போனவர்கள் பலர். நீங்களும் அந்த புள்ளிவிபரத்தில் சேரக் கூடாது என்றால் தொடர்ந்து படியுங்கள்.

முனைவர் சூரியஜீவன்

### கடன் வாங்குவது தவறா?

கடன் வாங்குவது தவறு என்ற கருத்து பலரிடமும் இருக்கிறது. உண்மையில் கடன் வாங்காமல் வாழலாம். ஆனால் அது வெற்றிகரமான வாழ்வாக அமையும் என்று சொல்ல முடியாது. கடன் வாங்காமலே, வறுமையிலிருந்து கோடிகளுக்கு அதிபதியானவர்கள் இருக்கிறார்கள். இது எல்லோரும் சாதிக்க கூடியதல்ல. வளர்ச்சியடைந்த நாடுகளில் சாதாரண மக்கள் கடன் வாங்காமல் வாழ்வது பெரும்பாலும் நடைமுறைக்கு சாத்தியமானதல்ல. கடன் வாங்குவது அடிப்படையில் தவறும் அல்ல.

கடன் வாங்கும் போது, உங்களது நிகர பெறுமதிக்கு மேலாக கடன் வாங்கினால் அது தான் தவறு. தவறு என்று சொல்வதிலும் பார்க்க மாபெரும் தவறு என்று சொல்வதே பொருத்தமாகும். இதற்கும் கூட ஒரு விதி விலக்கு உண்டு. அதை அறிய மேலே படியுங்கள்.

### உங்களது நிகர பெறுமதி என்ன?

உங்களது நிகர பெறுமதியை நீங்கள் அறிந்திருப்பது முக்கியமானது. உங்களது மொத்த சொத்தின் பெறுமதியிலிருந்து உங்களது கடன்கள் அனைத்தையும் கழித்த பின் மீதமாக இருக்கும் பெறுமதி உங்களது நிகர பெறுமதியாகும். உதாரணமாக, நீங்கள் வாழும் நாட்டிலிருந்து நிரந்தரமாக வெளியேற நீங்கள முடிவு செய்து விட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்படி வெளியேறும் போது, நீங்கள் இறுதியாக சொத்தெல்லாம் விற்று, கடனெல்லாம் அடைத்து, பணமாக உங்களுடன் கொண்டு செல்லக் கூடிய தொகை தான் உங்களது நிகர பெறுமதி. நீங்கள் வாங்கும் கடன், இந்த நிகர பெறுமதியை இல்லாமல் செய்யக் கூடாது.

வங்கிகள் கடன் தரும்போது உங்கள் நிகர பெறுமதியை கணக்கிடுகின்றன. உதாரணமாக, வருடம் ஒன்றுக்கு நீங்கள் 40,000 டொலர்கள் உழைப்பவர், 150,000 பெறுமதியான வீட்டை நீங்கள் வாங்குகிறீர்கள். இப்போது வீடு உங்களுக்கு சொந்தமாகிறது. ஆகவே வீட்டின் பெறுமதி உங்கள் பெறுமதியை 150,000 டொலர்களால் அதிகரிக்கிறது. அதேவேளை, நீங்கள் வங்கிக்கு கிட்டத்தட்ட அந்த தொகைக்கு கடன் படுகிறீர்கள். அந்த கடனை செலுத்திவர, வீட்டின் பெறுமதியும் அதிகரித்தால், உங்கள் நிகர பெறுமதி அதிகரித்து செல்லும்.

இதற்கு மாறாக, நீங்கள் 20 வீதத்துக்கு



உறவுகளை அழைக்கும், விளிக்கும் சொற்களில் உலகத்தில் உள்ளவற்றில் சிறப்பானது திராவிட உறவுமுறை அமைப்பு. இவை நம் தமிழரின் சொற்களாகும். ஆனால் அவற்றில் பல இன்று வழக்கொழிந்து வருகின்றது. தேவையற்று இவ்வாறான வளங்கள் அற்ற பல இனத்தவரைப் பார்த்து எம்மினத்தவர் போலச் செய்வதால் இது நிகழ்கிறது. எமது முறையில் மூத்த தலைமுறைக்கும் இளைய தலைமுறைக்குமாக அழைக்க நாற்பது சந்ததிகளுக்கான சொற்கள் இருக்கின்றன. தமிழ் மொழிச் சிறப்பு சொல்லிமாளாது!

ஊரிலே கடன்பட்டு 100,000 டொலர்கள் செலவு செய்து மகளுக்கு திருமணம் செய்துவைக்கிற்ர்கள் என்று வைத்துக் கொள்வோம். அந்த ப[illegible]தி[illegible] விழாவுக்கு வந்தவரகள் எலலாரும சாப்பிட்டு ஏப்பம் விட்டு போய்விடுவார்கள். உங்கள் நிகர பெறுமதி இப்போது [illegible], உங்களை கடனாளியாக்கியிருக்கும். உங்களையே விற்றாலும் அந்த கடனை நீங்கள் கட்டமுடியாது.

உங்கள் கடன்வாங்கும் தகுதியை அதிகரிக்க, நீங்கள் நிலையான, பெறுமதி அதிகரித்து செல்லும், உங்கள் சொத்துக்களை அதிகரிக்க வேண்டும். வீடுகள், நிலபுலங்கள், வணிக நிறுவனங்களை வாங்கி, அவற்றில் பணத்தை முதலீடு செய்வதன் மூலம் நீங்கள் உங்கள் நிகர பெறுமதியை அதிகரிக்கலாம்.

**கடன் வாங்கும் தகுதி**

வங்கிகள் கடன் அல்லது கடன் அட்டை தர முன்னர் உங்களுடைய கடன் வாங்கும் தகுதியை கணக்கிட்டு பார்க்கின்றன. உங்கள் நிகர பெறுமதி அந்த கணிப்புக்கு பயன்படுகிறது. அதனோடு, நீங்கள் இதற்கு முன்னர் எத்தனை முறை கடன் வாங்கி, தவணை முறையில் தவறாமல் திருப்பி கட்டி முடித்திருக்கிறீர்கள் என்பதையும் வங்கிகள் கணககெடுக்கினறன. ஆகவே, நீங்கள் கடன்வாங்கி திருப்பி கட்டியிருக் காவிட்டால், உங்கள் கடன்வாங்கும்




தகுதி மிகவும் குறைவாகவே இருக்கும். மேலும் உங்கள் நிகரபெறுமதியும் கடன் வாங்கி திருப்பிக்கட்டிய வரலாறும் வேறு நாட்டில் இடம் பெற்றிருந்தால், அந்த தகவல்கள் நீங்கள் வாழும் நாட்டில் பயனற்றவை. ஆகவே அடிப் படையில், கடன்வாங்கும் தகுதியை அதிகரிக்க, நீங்கள் வங்கிகளில் கடன் வாங்கி, வட்டியுடன் திருப்பி செலுத்திவர வேண்டும். இது கட்டாயம் செய்யவேண்டிய ஒன்று. கடன் வாங்கும் தகுதியை கணிப்பிட உங்கள் மாதாந்த வருமானமும் தேவையானது.

எதற்கு கடன் வாங்கலாம்?

கடன் வாங்கினால் வட்டி கட்ட வேண்டும். இந்த வட்டி வீதத்திலும் அதிகமாக வருமானம் தரும் முத லீட்டுக்கு கடன் வாங்கலாம். அல்லது, உங்களுக்கு நிலையான வருமானம் இருக்குமானல், வாழ்க்கைத்தரத்தை அதிகரிக்கும் ஒரு தேவைக்கு கடன் வாங்கி, வட்டியுடன் திருப்பி கட்டி வரலாம். ஆனால் இப்படியாக கடன் வாங்கும் போது, கடன் தொகை உங்கள் நிகர பெறுமதியை நிச்சயமாக மீறக்கூடாது. உதாரணமாக, நீங்கள் ஒரு உல்லாச பயணம் போக கடன் வாங்கலாம். ஒரு வருடத்தில்

தொடர்ச்சி 52 அவது பக்கம்

# லெமூரியா
## கண்டம்: ஒரு புதிய பார்வை

**த.சிவதாசன்**



நவீன உலகத்தின் ஆதிக்கப் போட்டிகளில் சிக்கித் தவிக்கும் உலக வரலாற்றில் உண்மைகள் தவிர்க்கப்பட்டும், திரிக்கப்பட்டும், நிரந்தரமாகவே புதைக்கப்பட்டும் போகின்ற அபாய சூழல் நிலவுகின்றது. குறிப்பாக ஒரு இனம் இவ்வுலகத்தின் நாகரீக வளர்ச்சிக்கு ஆற்றிய பங்கு, அதன் தொன்மம் பற்றிய அறிவு ஆகியன அவ்வினத்தின் எதிர்காலச் சந்ததியினர் ஏனைய இனங்களுடன் தலை நிமிர்ந்து நின்று சரிநிகர் சமானமாக வாழ்வதற்கு உறுதுணையாகவிருக்கும். அந்த வகையில் திராவிட நாகரீகம் உலக நாகரீகங்களின் முன்னோடியென்ற உண்மை பலவித சான்றுகளைக் கொண்டிருப்பினும் ஏனைய ஆதிக்கவினங்களின் மர்மக் கரங்களினால் அமுக்கப்பட்டே வந்திருக்கிறது. இன்றய விஞ்ஞானத் தொழில்நுட்ப யுகத்தில், மரபணுவியல் மற்றும் செய்மதி மூலம் பெறப்பட்ட நிலவியல் பற்றிய அறிவு ஆகியனவற்றின் வழி இனங்களின் தொன்மை பற்றிய விபரங்கள் மறுபிறப்பெடுத்து வருகின்றன. மறைந்து போனதெனக் கருதப்படும் லெமூரியாக் கண்டத்திற்கும் திராவிட நாகரீகத்திற்குமான உறவுகள் மீது இப்புதிய விபரங்களினால் ஒளிப்பாய்ச்சல் செய்வது எமது எதிர்காலச் சந்ததிகளுக்கு அத்தியாவசியமானது. குறிப்பாக, கடலுள் அமிழ்ந்து போனதாகக் கருதப்படும் மற்றுமோர் கண்டமான அட்லான்டிஸ் மீதான விபரங்கள் மேற்கத்திய இலக்கியங்களிலும் புதினத் தளங்களிலும் பாரம்பரியப் பெருமைசேர்ப்பனவாகப் பரிணமிக்கும் அதே வேளை லெமூரியர் பற்றிய விபரங்கள் விலங்குகளை அண்டியதொரு பாரம்பரியத்தைக் காட்ட முயல்பனவாகத் தரப்படுகின்றன. எமது பாரம்பரியத்தை உருவாக்கிய வேர் எதுவெனக் கண்டு அதற்கு உரம் சேர்க்க முனைவதே இக்கட்டுரையின் நோக்கம்.

லெமூரியாக் கண்டத்திற்கும் திராவிட பாரம்பரியத்துக்குமுள்ள தொடர்புகள் பற்றி பழந்தமிழ் இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. எனினும் அக்கண்டத்தின் முற்று முழுதான நிலவியல்புகளையோ அல்லது மனிதவியல்புகளையோ திராவிடப் பாரம்பரியத்தோடு உடன்படவைக்குமளவுக்கான தரவுகளை இவ்விலக்கியங்கள் கொண்டுள்ளனவா என்பது ஐயத்துக்கிடமாகவே உள்ளது. இருப்பினும் லெமூரியா பற்றிக் கிடைத்த ஏனைய தடயங்களையும் தரவுகளையும் வைத்து விஞ்ஞான ரீதியாகவும் தர்க்கரீதியாகவும் சில அனுமானங்களைப் பெறமுடியுமென்பதே எமது துணிபு.

லெமூரியாக் கண்டம் பற்றிய விபரங்களை மூன்று முக்கிய தளங்களில் பகுத்தாயலாம்.

1. லெமூரியாக் கண்டம் இருந்ததாகக் கருதப்படும் காலப்பகுதி.
2. அக்கண்டம் நிலைகொண்டிருந்த பிரதேசமும் புவிக்குணவியல்புகளும்.
3. அக்கண்டத்தில் வாழ்ந்ததாகக் கருதப்படும் மக்களின் குணவியல்புகள்.

ஏற்கனவே கூறியதுபோல, லெமூரியாக் கண்டத்தின் மீதான கரிசனை அக்கண்டத்தினால், உலகுக்குக் கிடைத்ததும் இனிமேலும் கிடைத்தற்குரியதுமான வளங்களை அடிப்படையாகக் கொண்டதே. இக்கண்டத்திற்கு உரிமை கொண்டாடுவதன்மூலம் உலகின் ஆதிக்க இனங்கள்



பெருநலன்களை அடையலாமென்பதால் இக்கண்டத்தின் பூகோள இருப்பு, அதன் காலப்பகுதி, அக்கண்டத்து மக்களது இனக்குழுமச் சார்பு பற்றிய தரவுகளைச் சாதகமாக அமைத்துக் கொள்வதில் சிலருக்கு சிரத்தை இருந்துவருகின்றது. இக்காரணத்தால் இக்கட்டுரையில் பலவேறு தரப்புகளிலிருந்தும் கிடைக்கப்பெற்ற தரவுகளை ஒப்பிட்டு தர்க்கரீதியான அனுமானமொன்றைப் பெற வழி செய்வதே நோக்கமாக வைக்கப்படுகிறது.

## லெமூரியாக் கண்டத்தின் காலப்பகுதி

லெமூரியாக் கண்டம் இருந்ததாகக் கருதப்படும் காலப்பகுதி பற்றிய சிலரது தகவல்களை இங்கு தருகிறோம்.

1875ம் ஆண்டு நியூயோர்க் நகரத்தில் வாழ்ந்த ரஷ்யாவைப் பிறப்பிடமாகக் கொண்ட ஹெலனா பெற்றோவ்னா பிளாவட்ஸ்கி என்ற பெண்மணி தனது நுண்ணறிவின் விளைவாக, லெமூரியாக் கண்டத்தின் காலப்பகுதி 150 மில்லியன் வருடங்களுக்கு முன்னாகவிருக்கலாம் என்கிறார். இவர் அக்காலத்தில் அமெரிக்காவிலும் ஜேர்மனியிலும் பிரபலமாகவிருந்த இறைஞானச் சங்கமொன்றில் (Theosophical Society) அங்கத்தவராகவிருந்தார். முக்காலங்களையும் உய்த்துணரும் மந்திர தந்திர சித்து வாகடங்களைக் கற்றறிந்த இவரும் இன்னும் பல ஆதிக்க வல்லமை

கொண்ட தோழர்களும் அங்கத்தவர்களாகவிருந்த இரகசிய அமைப்பான தூளி (Thule Society) அமைப்பின் நடைமுறைகளின்படி லெமூரியாக் கண்டத்தில் வாழ்ந்ததாகக் கருதப்படும் மக்கள் முக்காலமுணரும் தன்மையினரெனவும் மனித இனத்தின் தோற்றம் வளர்ச்சி பற்றிய நுண்ணறிவுகளை அவர்கள் சேமம் செய்து பாதுகாத்து வந்தனரெனவும் அவர்களது தரவுகள் இன்றும் உலகின் எங்கோ ஒரு இரகசியமான இடத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன எனவும் இவை பற்றிய உண்மைகள் ரகசிய அமைப்புகளின் அதியுயர் பீடதாரிகளுக்கு மட்டுமே தெரியுமெனவும் ஜிம் மார்ஸ் என்பவர் தனது "ரூள் பை சீக்கிரசி" என்ற நூலில் குறிப்பிடுகிறார். பிளாவட்ஸ்கியின் லெமூரிய மக்கள் பற்றிய அறிவை அவர் எந்தவித ஆய்வுகளின் மூலம்



பெறாது தனது நுண்ணறிவின் மூலம் (Clairvoyance) பெற்றதாகக் கூறுகிறார். 1896ல் ஸ்கொட் எலியட் எனப்படும் இறைஞானியும் லெமூரியக் கண்டம் பற்றிய பல விபரங்களைத் தன் நுண்ணறிவின் மூலம் பெற்றதாக "The Story of Atlantis and The Lost lemuria" என்ற நூலில் குறிப்பிடுகிறார். உய்த்துணர்ந்த இத்தரவு ஆதாரமற்றது ஆனாலும் இவ்வாய்வில் அதற்கும் இடமளிக்கப்பட வேண்டும்.

விஞ்ஞான ரீதியாக, இந்தியா, தென்னாபிரிக்கா, அவுஸ்திரேலியா மற்றும் தென்னமெரிக்கா சார்ந்த ஊழியின் பின்னான (Permian Age) தொல்லுயிர்ப் படுகையின் கள ஆய்வுத் தரவுகளின்படி லெமூரியாவின் காலம் 245 தொடக்கம் 286 மில்லியன் வருடங்கள் எனப்படுகிறது. இவ்வனைத்து நாடுகளிலும் காணப்பட்ட தாவர, விலங்கினப் புதை படிவங்கள் (Fossils) அத்தனையும் ஒப்புமை கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.

பிரித்தானிய இந்தியாவின் இராணுவத்தில் கடமையாற்றிய கேணல் ஜேம்ஸ் சேர்ச்வார்ட் என்பவரது குறிப்புகளின்படி (1926) லெமூரியாவின் இருப்பு 50,000 ஆண்டுகளை அண்டியது. இவரால் இந்தியாவில் கண்டெடுக்கப்பட்ட மட்படிவங்களை ஒத்த படிவங்கள் இவரது நண்பரால் மெக்சிக்கோவிலும் கண்டெடுக்கப்பட்டன. சுமார் 12,000 தொடக்கம் 15,000 ஆண்டுகளை அண்டிய இப்படிவங்கள் இந்தியாவிலுள்ள ஒரு இந்து மதகுருவால் புரியவைக்கப்பட்டன என்றும் "மனிதன் தோன்றியதே இக்கண்டத்திலிருந்துதான். ஏழு இரவுகளிலும், ஏழு பகல்களிலும் உலகம் உருவாக்கப்பட்டது என்ற விவிலிய நூலின் குறிப்புகளின் ஆதிமூலம் லெமூரியாக் கண்டமே" என்று மிகவும் உறுதியாக அவர் கூறுகிறார். இந்தியாவிற் கண்டெடுக்கப்பட்டு கவனிப்பாரற்றுக் கிடக்கும் எத்தனையோ மட்படிவங்களின் மூலம் இவ்வுண்மையை நிரூபித்துக் காட்டமுடியும் என்று சவால் விடுகிறார் சேர்ச்வார்ட்.

1931ம் ஆண்டு W.S. Cerve என்பார் எழுதிய "Lemuria - The Lost Continent of The Pacific" என்ற நூலில் 200,000 ஆண்டுகளுக்கு முன்னர் உலகம் கண்டங்களாகப் பிரியாத கோளமாக இருந்ததெனவும் பின்னர் இடையிடையே படிப்படியாக நடந்த அனர்த்தங்களினால் அது உடைபட்டு சுமார் 12,000 ஆண்டுகளுக்கு முன்னர் இறுதியாக நீரில் மூழ்கிக்கொண்டது என்கிறார்.

ஷெல்டன் நிடால் என்பவரின் கூற்றுப்படி (இவர் தன் குழந்தைப் பருவத்திலிருந்தே சிறியஸ் கிரகத்தினரோடு தொடர்பு வைத்திருப்பதாகக் கூறுபவர்) 900,000 ஆண்டுகளுக்கு முன்னர் வேறு கிரகத்திலிருந்து வந்த மனிதர்கள் லெமூரியாக் கண்டத்தில் குடியேறினார்கள் எனப்படுகிறது. அடுத்த 850,000 ஆண்டுகளில் இவர்கள் பூமி முழுவதும் பரம்பலடைந்தனர். இவர்கள் உருவாக்கிய பல குடியேற்றங்களில் அட்லான்டிஸ், யூ (மத்திய சீனாவும் திபெத்தும்) மற்றும் லிபிய எகிப்திய குடியேற்றங்கள் அடங்கும். இக்குடியேற்றங்களிடையே படிப்படியாக ஏற்பட்ட பகைமை காரணமாகவும் அட்லான்டியர் தாமே மனித இனத்தில் முதன்மையானவர்கள் என்று கருதியதாலும் லெமூரியரை அழிப்பதற்கு முனைந்து வெற்றியும் பெற்றனர். 25,000 ஆவது ஆண்டுகளை அண்டிய காலத்தில் அது நடைபெற்றது. அப்போது பூமிக்கு இரண்டு சந்திரர்கள் இருந்ததாகவும் ஈர்ப்பு விசைகளைப் பாவித்து அச்சந்திரர்களில் ஒன்றை

Map of Churchward's Mu சேச்வாட்ஸின் வரைபடம்



லெமூரியாவிற்கு அருகில் வரவழைத்து அழித்துக் கொண்டதால் லெமூரியாக் கண்டத்தின் பெரும்பகுதி கடலில் அமிழ்ந்து போனதாகவும் நிடால் கூறுகிறார்.

## அனுமானம்

மேற்கூறிய தரவுகளின் பல வடிவங்களும் உண்மையானவையோ அல்லது பலரும் தத்தம் தேவைகள் விருப்பு வெறுப்புகளுக்கேற்ப இக்கதைகளைக் கூறுகிறார்களா என்பதை இனிவரும் ஆய்வாளர்கள் தீர்மானித்துக் கொள்வார்கள். இருப்பினும் பெரும்பாலான தரவுகளின்படி லெமூரியாக் கண்டத்தில் மக்கள் வாழ்ந்தது பற்றிய பொதுவான இழையைப் பற்றிப் பார்ப்பின் அது 200,000 ஆண்டுகளையே குறிப்பிட்டு நிற்கிறது. ஆனால் அக்கண்டத்தின் அழிவு 12,000 இலிருந்து 25,000ஆவது ஆண்டுகளில் நிறைவேறியிருக்கலாம் என்பதற்கான பொது இழையொன்றை இங்கு நாம் அவதானிக்கலாம். ஆனால் லெமூரியாக் கண்டத்தின் அழிவு படிப்படியாக நடைபெற்றிருப்பின் சங்க இலக்கியங்களிற் குறிப்பிட்டபடி தென்மதுரையும், கபாடபுரமும் லெமூரியாவின் இறுதி எச்சங்களாவே பார்க்கப்பட வேண்டும்.

## லெமூரியாக் கண்டம் நிலைகொண்டிருந்த பிரதேசம்

மேற்கூறிய பல தரவுகளின்படி லெமூரியாக் கண்டம் அமெரிக்காக் கண்டத்திற்கு மேற்கேயும் தென்னாசிய, அவுச்திரேலிய கரைப்பிரதேசத்திற்கு கிழக்கேயுமான பசிபிக் பிரதேசத்தில் இருந்ததாகவே குறிப்பிடப்படுகிறது. 5000 மைல்கள் நீளமானதும் 3000 மைல்கள் அகலமானதுமான இப்பிரதேசத்தில் 64 மில்லியன் மக்கள் வாழ்ந்தார்கள் என்று ஜேம்ஸ் சேர்ச்வார்ட் கூறுகிறார். தற்போதுள்ள பசிபிக் தீவுகளான மோய்,(Maui) இற்கும் 'ஓஆஹு' (Oahu) இற்கும் இடையிலே லெமூரியாக கண்டத்தின் இடிபாடுகள் காணப்பட்டதாகவும் 1972ம் ஆண்டு அமெரிக்க அரசின் கடற்தளப் புலனாய்வுப் பிரிவு இப்பிரதேசத்தைத் தமது அதியுயர் இரகசியத் திட்டமாக்கி ஆய்வு செய்துவருகிறதென்றும் அறியப்படுகிறது. இருப்பினும் லெமூரிய சாம்ராஜ்யத்தின் பரம்பல் பிஜித் தீவுகள், ஹவாய்த் தீவுகள், ஈஸ்டர் தீவு லொஸ் ஏஞ்சலிஸ் என்று வரையறுக்கிறார் சேர்ச்வார்ட்.

இதேவேளை, லெமூரியாக் கண்டத்தின் இருப்பு இந்து சமுத்திரத்தில் மேற்கே ஆபிரிக்காவிலிருந்து கிழக்கே அவுஸ்திரேலியா வரையும் வடக்கே இந்தியாவை உள்ளடக்கியதாகவும் இன்னுமொருசாரார் கூறுகிறார்கள். இந்த நிலப்பரப்பின் எச்சமாகவே இன்றைய மடகாஸ்கார் தீவு இருக்கிறதென்றும் 200,000 வருடங்களுக்கு முன்னர் ஆபிரிக்கா, ஆசியா, அவுஸ்திரேலியா ஆகிய கண்டங்கள் இணைக்கப் பட்டிருந்தனவென்றும் கருதப்படுகிறது. இம் மூன்று தரைப் பிரதேசங்களிலிருந்தும் பெறப்பட்ட தாவர, விலங்குகளின் உடற்பதிவுகள் மற்றும் அங்கு தற்போது வாழ்ந்துவரும் உயிரினங்களிடையுள்ள பொதுமைகள் போன்றவற்றைக் காரணம் காட்டி இக்கண்டங்களின் இணைப்பைப் பொதுவாக எல்லாத் தரவுகளுமே ஊர்ஜிதம் செய்கின்றன.

## அனுமானம்

மேற்கூறிய இரண்டு முரண்பட்ட தரவுகளையும் புவியியற் காரணங்களோடு ஆராய்ந்தால், லெமூரியாக் கண்டம் ஆபிரிக்க, ஆசிய, அவுஸ்திரேலிய முக்கோணத்திலேயே அமைந்திருப்பதற்கான சான்றுகள் இருக்கின்றன. இம்மூன்று கண்டங்களிற்கிடையேயும் பாரியதொரு நிலப்பிரதேசம்




கட்டுரையில் குறிப்பிட்டுள்ள சேர்ச்வார்ட்

ஆரம்பத்தில் இல்லாதிருந்திருப்பின் கண்டங்களின் விலகுதலாலேயே அப்பிரதேசம் (நிலமற்ற) உருவாகியிருக்க வேண்டும். கண்டங்கள் விலகுவதால் அவ்விடை-வெளி ஏற்பட்டிருப்பின் அவற்றின் விளிம்புவரைகள் (Contours) ஒன்றுக்கொன்று பொருந்தக்கூடியனவாக அமைந்திருக்கும். உதாரணமாக அமெரிக்காவின் கிழக்குக் கரைப் பிரதேசத்தின் விளிம்புவரையும் ஆபிரிக்காவின் விளிம்புவரையும், ஐரோப்பா, கிறீன்லாந்து ஆகிய பிரதேசங்களின் விளிம்புவரைகளும் இன்றும்கூடப் பொருந்தக்கூடியனவாகவே இருக்கின்றன. கண்டங்களின் நகர்வுகளாலேயே இந்த அட்லான்டிக் சமுத்திரத்தின் இடைவெளி உருவாகியிருக்கிறது. இப்பிரதேசத்திலேயே அட்லான்டிஸ் கண்டம் இருந்து நீரில் அமிழ்ந்ததாக சேர்வே கூறுவதை நிரூபிக்க

---

### உலகிலேயே அமெரிக்காவில் கைதிகள் அதிகம்

அமெரிக்காவில்தான் கைதிகள் தொகை அதிகம். 2004இல் 1.9 சதவீதம் அதிகரித்து உள்ளது. அனைத்து சிறைகளிலும் 40சதவீதம் அளவுக்கும் அதிகமாக கைதிகள் இருக்கிறார்கள். 2004 இறுதியில் கைதிகள் எண்ணிக்கை 23 லட்சம். அமெரிக்காவின் மொத்த மக்கள் தொகை 29 கோடியே 60 லட்சம் ஆகும். கைதிகளின் எண்ணிக்கையில் அமெரிக்காவுக்கு அடுத்த இடத்தில் சீனா. அங்கு 15 லட்சம் கைதிகள் இருக்கிறார்கள். ஆனால் சீனாவின் மக்கள்தொகையோ 103 கோடி. அமெரிக்காவின் தெற்கில் உள்ள 5 மாநிலங்களில்தான் கைது அதிகம். அண்மையில் பெரும் பாதிப்பிற்குள்ளான லூசியானா மாநிலத்தில் ஒரு லட்சம் பேருக்கு 816 பேர் கைது செய்யப்பட்டவராயிருக்கின்றனர். அமெரிக்காவின் தெற்குப் பகுதிகளில்தான் வறுமையும் அதிகம். நல்ல நாடு !

இயலாதிருக்கிறது. இதையொத்த விளிம்புவரையை இந்துசமுத்திரப் பிரதேசத்தில் காணமுடியவில்லை.

அதேவேளை, லெமூரியாக் கண்டம் ஆபிரிக்காவின் கிழக்குக் கரையில் ஆரம்பித்து இந்து, பசிபிக் சமுத்திரப் பிரதேசங்களை உள்ளடக்கியதாகவிருந்திருப்பின் தற்போதய பசிபிக் தீவுகள் லெமூரியாக் கண்டத்தின் எச்சங்களாக இருந்திருக்க முடியுமா? அப்படியானால் அட்லான்டிஸ் கண்டம் எங்கிருந்திருக்க முடியும்? சேர்ச்வார்ட், சேர்வே ஆகியவர்களின்



தற்போதைய உலகபடத்தில் லெமூரியா இருக்கக்கூடிய அமைவிடம்

குறிப்புக்களின்படி மடகாஸ்கார் தீவு ஆபிரிக்காவிற்கு மிக அருகிலிருந்தும் அத்தீவின் குணவியல்புகள், உயிரினப் பதிவுகளின் பொதுக்குணவியல்புகள் ஆபிரிக்கப் பிரதேசத்தைவிடத் தனித்துவமானதாக இருப்பதாகக் கருதப்படுகிறது.

19ம் நூற்றாண்டில் டார்வினுடைய கூர்ப்புக் கொள்கை பிரபலமாகவிருந்த காலத்தில் லெமூரியாக் கண்டத்தைப் பற்றிய ஆய்வுகளைச் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. விலங்கியலாளர் மத்தியில் இருந்த ஆச்சரியமான கேள்வி இதுதான். லெமூர் எனப்படும் எனப்படும் நீண்ட முஞ்சியையுடைய சிறிய குரங்கினம் எப்படி ஆபிரிக்கா, மடகாஸ்கார், இந்தியா மற்றும் இந்து சமுத்திரத்திலுள்ள குறுந்தீவுகளில் மட்டும் பரவலாகக் காணப்பட்டது? அப்படியா[illegible]ரிய நிலப்பரப்[illegible] இப்பிரதேசங்களை ஒரு காலத்தில் இணைத்திருந்திருக்க வேண்டும். லெமூர் இனக் குரங்குகள் வாழ்ந்தபடியால் இப்பிரதேசத்தை லெமூரியா எனப் பெயரிட்டார் ஆங்கிலேய விலங்கியலாளர் பிலிப் சிலேட்டர்.

ஆனால், ஹெலெனா பிளாட்டோவ்ஸ்கியின் 1888ம் ஆண்டு வெளியிடப்பட்ட The Secret Doctribne என்ற நூலில் தனக்கு மஹாத்மாக்களிடமிருந்து கிடைத்த ஞானத்தின் பிரகாரம் லெமூரியா இந்து சமுத்திரத்தில் 150 மில்லியன் வருடங்களுக்கு முன்னரேயே இருந்ததாகக் கூறுகிறார். இவர் இந்தியாவில் சிலகாலம் வாழ்ந்து சமஸ்கிருத மரபுவழிக் கதைகளைக் கேட்டறிந்து இந்து சமுத்திரத்தில் அமிழ்ந்துபோன நிலப்பிரதேசம் பற்றிக் குறிப்பிட்டிருக்கலாமென்றும் ஆனால் அக்கதைகளின்படி அமிழ்ந்துபோன பிரதேசத்துக்கு ரூதாஸ் (Rutas) எனப் பெயரிட்டிருந்ததாகவும் அப்போது அது பெரும் கவனத்தை ஈர்த்திருக்கவில்லையெனவும் வரலாற்றாளர் கருதுகின்றனர்.

அப்படியானால், பசிபிக் சமுத்திரத்தில் இருந்து அமிழ்ந்துபோனதாகக் கருதப்படும் நிலப்பரப்பு எது? பசிபிக் சமுத்திரத்தில் தற்போது காணப்படும் தீவுக்கூட்டங்களிற் கிடைத்த தரவுகளின்படி நீருக்கடியில் பூதாகாரமான கற்சுவர்கள், தெருக்கள், தூண்கள், மேடைகள் என்பன காணப்படுவதாகவும் நிலக்கரிப் படுகைகள் பெருந் தொகையாக இருப்பதாகவும் அறியப்படுகிறது. ஒரு காலத்தில் இந் நிலப்பரப்பு உலர் பிரதேசமாக இருந்திருக்க வேண்டுமென்பதற்கு நிறைய ஆதாரங்கள் புலப்படுகின்றன ஆனால் இப்பிரதேசத்துக்கும் இந்துசமுத்திரப் பிரதேசத்துக்கும் இடையேயான உயிரியல் குணவியல்புகளில் குறிப்பிடப்படும் அளவுக்கு ஒற்றுமையில்லை. இப்பிரதேசமே “மூ“ (Mu) என்று அழைக்கப்பட்டு இருக்கலாமென்பது சேர்ச்வாட் அவர்களது அனுமானம். ஈஸ்டர் தீவுகளிற் காணப்படும் பாரிய கற்சிலைகளை உருவாக்கியவர் மூ தேசத்தவர்களே என்பது பொதுவான அபிப்பிராயம்.

> விஞ்ஞான ரீதியாக, இந்தியா, தென்னாபிரிக்கா, அவுஸ்திரேலியா மற்றும் தென்னமெரிக்கா சார்ந்த ஊழியின் பின்னான (Permian Age) தொல்லுயிர்ப் படுகையின் கள ஆய்வுத் தரவுகளின்படி லெமூரியாவின் காலம் 245 தொடக்கம் 286 மில்லியன் வருடங்கள்

## 3. லெமூரிய மக்கள்

ஹெலனா பிளாவட்ஸ்கியின் கூற்றுப்படி இந்த உலகில் ஏழு விதமான வேர் இனமக்கள் (Root Races) வாழ்வர் எனவும் அதில் லெமூரியாக் கண்டத்தில் வாழ்ந்ததாகக் கருதப்படும் மக்கள் முன்றாவது வேரினமெனவும் அதற்கு அடுத்ததாக நான்காவது இனமான அட்லாந்திய மக்களும், இன்றைய உலகில் வாழும் நாம் ஐந்தாவது வேரினத்தவர் எனவும் இதன் பின்னர் தோன்றும் ஆறாவது இனம் மீண்டும் மறுபிறப்பெடுக்கும் லெமூரியாக் கண்டத்தில் மீண்டும் தளைக்குமெனவும் ஆவியுலகத் தொடர்புகளின் மூலம் அறிந்ததாகக் கூறுகிறார். ஏழாவது வேரினத்தின் முடிவில் அவ்வினம் மீண்டும் வீனஸ் கிரகத்துக்குப் போய்விடுவர்

என்றும் அவர் கூறுகிறார். நான்காவது வேரினமான அட்லாந்திய மக்களே முழுமையாக உருவாகிய மனிதர் எனவும் அவர்களின் உப இனமே அவுஸ்திரேலிய ஆதிவாசிகள், மற்றும் பப்புவர், ஹொட்டென்ரோட்கள் என்பவர்கள் என்பதும் அவரது கருத்து. இதை உறுதி செய்யுமாற்போல் அமெரிக்காவில் 27,000 வருடங்களுக்கு முன்னர் அவுஸ்திரேலிய பிக்மி இனத்தவர் வாழ்ந்ததற்கான அறிகுறிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

ஹெலனா பிளவாட்ஸ்கி லெமூரியா பற்றிய தனது கருத்துக்களை மஹாத்மாக்களிடமிருந்து (ஆவியுலகு) பெற்றுக்கொண்டதாகக் கூறுகிறார். இதற்காக இவரும் இவரது சகாக்களும் இறைஞான அமைப்பொன்றை உருவாக்கி அதன் தலைமைத் தளத்தை சென்னையில் வைத்திருந்தனர். இவர்கள் மூலமாக இந்தியாவின் வழக்கிலிருந்த சோதிடம், மந்திர வாகடங்கள் போன்றன மேற்கில் பிரபலமடைந்தன. மறு பிறப்பு, வெளிக்கிரக வாசிகளுடனான தொடர்பு, வெள்ளை இனத்தின் முதன்மைத்துவம் போன்றவற்றில் தீவிர ஈடுபாட்டைக் காட்டிய இந்த இறைஞான அமைப்பு இந்தியாவிலுள்ள சமசிந்தனையுள்ளவர்களுடன் சேர்ந்து சமஸ்கிருத மரபுவழிக் கதைகளை ஆராய்ந்து அதன் பெறுபேறாக லெமூரியா, அட்லான்டிஸ் கண்டங்கள் பற்றிய அறிவையும் வளர்த்துக்கொண்டனர். ஆவிகளுடனான தொடர்புகளால் இத்தரவுகளைப் பெற்றதாக பிளவாட்ஸ்கி போன்று பலரும் கூறத்தலைப்பட்டனர். இந்தியாவில் இவர்களுக்குக்

## லெமூரியாக் கண்டத்தின் மக்கள் வேற்றுக் கிரகத்திலிருந்து குடியேறினர் என்ற கருத்து மிகவும் பிரபலமடைந்து வருகிறது.

கிடைத்த ஆலோசனைகளும் தொன்மைப் பதிவுகள் பற்றிய தரவுகளும் ஆரியரெனத் தம்மை வர்ணிக்கும் இந்தியர்களாற் கொடுக்கப்பட்டிருப்பின் லெமூரியாக் கண்டத்தில் வாழ்ந்த மக்கள் பற்றிய விபரங்கள் திரிபு படுத்தப்பட்டிருக்கலாம். இருப்பினும் லெமூரியாவில் வாழ்ந்த முதல் வேரின மக்களின் குணவியல்புகளுக்கும் இந்துக்களின் கடவுளர்கள் பற்றி எமக்குச் சொல்லப்பட்ட குணவியல்புகளுக்கும் இடையே இழையோடுவதான கணிப்பும் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது.

லெமூரியக் கண்டத்தில் வாழ்ந்த மக்கள் ஓரளவுக்குப் பெண்தன்மை கொண்ட இளகிய மனதுடையவராயும், சூரியனையே முழுமுதற் கடவுளாக வழிபடுபவராயும் அதேவேளை பூமாதேவியைத் தாய்போல் மதிக்கும் பண்புள்ளவராயும் பல குணவியல்புகளைக் கொண்டிருந்ததாக வர்ணிக்கப்படுகின்றனர். இவர்கள் வசிய உணர்வாட்சி



லியோன் ரொற்ஸ்கி (1879-1940) ர்ய மார்க்சியர். ஒக்ரோபர் 1917ல் புரட்சி இவரால் ஒருங்கிணைக்கப்பட்டு நடத்தப்பட்டது. இதனால் பொல்ஸ்சவிக்குக்கு ஆட்சி அதிகாரம் கிடைத்தது. ரொற்ஸ்கி சிறந்த நிர்வாகத் திறமையும் ஆழமான கருத்தியல்களையும் கொண்டவர். ர்ய அரசில் முக்கியமான பல பதவிகளை வகித்திருந்தார். 1925 காலப்பகுதியில் ஸ்ராலினுக்கு எதிராக ஸ்ராலின் சர்வாதிகாரப் போக்குக்கு எதிராக இருந்தார். இவர் முன்னைய சோவியத்யூனியனுக்கு உட்பட்ட உக்கிரேனில் பிறந்தவர். எல்லாப் பாடங்களிலும் திறமையுடையவராக வகுப்பில் முதல் மாணவராகத் திகழ்ந்தார். பின்னர் ரஸ்யாவை விட்டுத் தப்பி ஆர்ஜென்டீனாவில் தஞ்சம் அடைந்திருந்தார். இவரது பெயரால் பல மார்க்சியக் கட்சிகள், பிரிவுகள் இயங்கி வருகின்றன.

(Telepathy) கொண்டு மற்றயவர்களுடன் உணர்வுத் தொடர்புகளை ஏற்படுத்தி செய்திப் பரிமாற்றம் செய்யக்கூடிய தன்மையுடையவர்கள் எனவும் இதனால் இவர்களுக்குப் பிதிர்களுடனான தொடர்பும் சிலவேளைகளில் வேற்றுலக வாசிகளுடனான தொடர்பும் இருந்திருக்க வாய்ப்புண்டு எனவும் கருத இடமுண்டு. உணர்வுகளால் ஏற்படுத்தப்படும் விசைகளைப் பாவித்து பாரிய பொருட்களை இடமாற்றம் செய்ய இவர்களால் முடியுமென்பதைப் பலவித கட்டுமானங்களிலிருந்து உய்த்துணரக்கூடியதாயுள்ளது.

லெமூரியாக் கண்டத்தின் மக்கள் வேற்றுக்கிரகத்திலிருந்து குடியேறினர் என்ற கருத்து மிகவும் பிரபலமடைந்து வருகிறது. ஆரம்பகாலத்து லெமூரியருக்கு மூன்று கண்களும் நான்கு கைகளும் பூதங்கள் போன்ற உருவங்களும் கால்களில் பின்விரல் இருப்பதானாலும் பிடரியில் கண் ஒன்று இருந்ததென்றும் அதன் காரணமாக அவர்களால் பின்நோக்கி நடக்கும் திறமையிருந்ததென்றும் சிலர் கருதுகிறார்கள். இவர்களுக்கு நெற்றியின் நடுவே மூன்றாவது கண் இருந்ததென்றும் அதீதமான சக்தி அல்லது உணர்வுப் பிரயோகத் தேவை ஏற்படும்போது மட்டுமே இக்கண் பாவிக்கப்படுமென்றும் மற்றெந்தப் புலன்களாலும் உணரமுடியாத விடயங்களை இக்கட்புலன் உணருமென்றும் சில குறிப்புகள் கிடைக்கின்றன. இம்மனிதர்கள் ஆண் பெண் சேர்ந்த அர்த்த நாரீஸ்வரர் போன்ற இருபால் மனிதர் எனவும் பின்னர் இரண்டாவது மூன்றாவது வேரினமாகப் பரிணாமமெடுக்கும்போதே ஆண் பெண் என்று இரு தனிப்பாற்களாக இம்மக்கள் பிரிக்கப்பட்டனரென்றும் பிளவாட்ஸ்கி கூறுகிறார். இவற்றையெல்லாம் பார்க்கும்போது இந்துக் கடவுளர்களது சில குணவியல்புகளை நினைவுகூரக்கூடியதாக அமைவது தவிர்க்க முடியாததே.

தொடரும்...

# புதிதாய் ஓர் உறவு

இணுவில் ஆர்.எம்.கிருபாகரன்

அதிகாலை வெய்யில் முகத்தில் நேரே பட கண் கூசியது. உந்துருளியில் வேகமாய்ச் சென்ற சீவகனுக்கு இதயம் உந்துருளியின் வேகத்தை விட வேகமாக அடித்துக் கொண்டது. எதிர்க்காத்து உடம்பிலே பட சில்லென்றிருந்தது. ஆனால் மனம் தான் என்னவோ சீவகனுக்கு சப்பென்றிருந்தது. வீதியின் இரு மருங்கும் உந்துருளிகள், பாத சாரிகள் எனப் பலர் சென்று கொண்டிருக்கின்றனர். அதிலே ஓர் உந்துருளி வேகத்தைக் குறைத்து சீவகனின் அருகே வந்து,

"டேய் சீவகா... டேய்..."

என்று கூப்பிடும் சத்தம் கேட்டு, சீவகன் திரும்பினான். நண்பன் செவ்வேள் வாயெல்லாம் பல்லாய்ச் சிரித்தபடி தன் உந்துருளியை நிறுத்தி,

"எங்கே இந்தப் பக்கம் போறா?"

"மாறன் இருக்கிற வீட்டுக்குப் போறன். வாறியா?"

எங்கே போகக் கூடாது என்று சீவகன் நினைத்தானோ, அங்கு போக செவ்வேள் கேட்டது, சங்கடத்தைக் கொடுத்தது. இவனை எப்படியும் காய் வெட்டி விடவேணும் என்று நினைத்த சீவகன், "அவசரமாய்க் கடைக்குப் போறன். நீ போ, பிறகு நான் வாறன்" என்று சொல்லி செவ்வேளின் பதில் வர முன்னரே உந்துருளியினைத் திருப்பிப் புறப்பட்டான். சீவகனின் முகத்தில் கண்ட மாற்றமும், அவன் போன விதமும், செவ்வேளின் சந்தேகத்தை வலுவாக்கியது.

சீவகனின் மனம் செவ்வேளை நினைத்து வருந்தியது. காய் வெட்டிப் போட்டு வந்ததில் என் மீது கோபம் இருக்குமோ?. சீவகனின் சொந்த இடம் வவுனியா, ஏழை விவசாயக் குடும்பத்தில் மூத்தபிள்ளை. இரு தங்கைகள் உண்டு. செவ்வேளின் சொந்தக் கிராமம் காயங்கேணி. ஓரளவு வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவன், நெல் மொத்த வியாபாரி குடும்பத்தில் மூன்றாவது மகன். மாறன் நுவரேலியாவைப் பிறப்பிடமாகக் கொண்டவன். நல்ல வசதியான குடும்பத்தில், கடைக் குட்டி காசுப்புழக்கத்திற்கு தட்டுப்பாடில்லாத பேர்விழி. இந்த மூன்று பேரையும் ஒன்றாகச் சந்திக்க வைத்தவர் சந்திரசேகரம். யாழ்ப்பாணம் கஸ்தூரியார் வீதியிலே உள்ள அவரது வீட்டின் இரண்டு அறைகளை இந்த மூன்று பேருக்கும் வாடகைக்குக் கொடுத்து, அதே வீட்டில் இருக்கும் ஓய்வு பெற்ற அரச ஊழியர். மனைவியை நாலாண்டுகளுக்கு முன் இழந்த சந்திர சேகரத்தாருக்கு பிள்ளைச் செல்வம் கிடையாது. சுமார் நாலாண்டாகக் கலகலப்பில்லாத இவரின் வீடு இந்த மூன்று பேரின் வருகையால் கலகலப்பாகக் காணப்பட்டது.

மூன்று பேரும் ஆரம்பத்திலே சமையலில் பட்ட கஸ்டம் இவர்களுக்குத் தான் வெளிச்சம். புது அனுபவம். சகல சாப்பாட்டிலும் துலாம்பரமாகத் தெரிந்தது. சந்திரசேகரத்தாரின் உதவியால் பல விடயங்களைக் கற்றுக் கொண்டனர் சமையலில். மூன்று பேரும் ஏறக்குறைய ஒரே வயதுக்காரர்கள், தனியார் கல்வி நிலையத்தில் படித்துக் க.பொ.த. உயர்தரப் பரீட்சைக்குத் தோற்றவிருப்பவர்கள். விஞ்ஞான - கணித மாணவர்கள் என்பதால் சந்திர சேகரத்தாரின் உதவி இவர்களுக்குப் பெரிதும் கைகொடுத்தது. விஞ்ஞானப் பட்டதாரி யான சந்திர சேகரத்தாருக்கும் இவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதில் திருப்தியிருந்தது.

இந்த மூன்று நண்பர்களின் நட்புக்குள் கீறல் விழ்ந்த சம்பவம் குருநகர் இராணுவ முகாமுக்குள் இடம் பெற்றது. போராளிகளின் கட்டுப்பாட்டில் யாழ்ப்பாணக் குடா நாடு வராத காலமது. எப்போதாவது இராணுவம் ரோந்து வரலாம் என்ற பயம் எல்லோரிடமும் இருந்தது. மாறனின் நண்பனான போராளி ஒருவர், இவர்களின் வீட்டுக்கு வந்து போனதாய்க் கேள்விப்பட்ட இராணுவம், மூன்று பேரையும் பிடித்து முகாமுக்குள் கொண்டு வந்தது.

இரண்டு நாள் தாங்கமுடியாத அடி, உதை, சித்திர வதையில் செவ்வெள் உண்மையைக் கக்கிவிட்டான்.

மாறனின் நண்பன் தான் போராளி என்று சொல்லியதால் செவ்வேளும், சீவகனும் விடுதலை செய்யப்பட்டனர். போராளி நண்பனைக் காட்டிக் கொடுக்கும்படி மாறனுக்குச் சித்திரவதை தொடர்ந்தது. சீவகனும் செவ்வேளும் வீடு வந்து சேர்ந்தபோதுதான் சந்திரசேகத்தாருக்கு விடயம் விளங்கியது. இரண்டு நாட்கள் இவர்கள் எங்கே போனார்கள் என்று. வாடகைக்கு இருக்க வந்து சொற்ப மாதங்கள் என்பதால், இவர்களின் முழு விபரங்கள் சந்திரசேகரத்தாருக்கு தெரியவில்லை. இதனால் எங்கே போய்த் தேடுவது என்று அந்த இரண்டு நாட்களும் திண்டாடிப் போனார். செல்வாக்குள்ள நண்பர்கள் மூலம் தொடர்பு கொண்டு மாறனை விடுவித்தார் சந்திரசேகரத்தார்.

மாறன் வீட்டுக்கு வந்ததும் ஒரே அமைதி நிலவியது. மாறனின்

குளிர்காலத்தில் உடலைப் பாதுகாக்க புவியின் வடக்குப் பகுதியில் இருப்பவர்கள் ஒரு உத்தியைக் கையாளலாம். குளிர் அளவு ஒவ்வொரு 10டிகிரி செல்சியசால் குறைகையில் நாம் அணியும் உடையின் அடுக்குகளை ஒவ்வொன்றாகக் கூட்டலாம். அதுவே குளிரில் இருந்து பாதுகாக்கும் முதன்மை வழி. அடுத்து சிறிய இனிப்பு வகைகளை பையில் போட்டு வைத்திருந்துச் எடுத்து சாப்பிடலாம்.

முகத்தில் ஈயாடவில்லை. மீதி மூன்று பேரும் அவனின் முகத்தை உற்றுப் பார்த்தபோது அழுது விடுவான் போலிருந்தது. மாறனைத் தான் காட்டிக் கொடுத்துவிட்டேனே என்ற குற்ற உணர்வு செவ்வேளை முள்ளாய் குத்தியது. மாறனின் அமைதி அவனைக் கொல்லாமல் கொன்றது. தன்மீது தான் கோபம் இருக்கும் என்று பயந்தபோது செவ்வேளையறியாமல் அழுகை வெடித்தது.

"டேய் மாறன் என்னிலை கோபிக்காதை, அடி, உதை, வேதனை தாங்கமுடியாமல் என்னையறியாமல் உண்மையைச் சொல்லிப் போட்டேனடா", செவ்வேள் விக்கி விக்கியழுதான். செவ்வேள் பேசத் தொடங்க மாறனின் கண்ணில் நீர் தாரை தாரையாக வழிந்தது.

"செவ்வேள்... டேய்... செவ்வேள்.... உன்னைப் போல் தான் எனக்கும் சீவகனுக்கும் அடி, சித்திரவதை நடந்தது. ஆனால் வாய் திறக்கவில்லையே. உனக்கு மட்டும்...." மாறன் பல்லைக் கடித்தபடி கர்ச்சித்தான். இந்தப் பாய்ச்சலை யாரும் எதிர்பார்க்க வில்லை. மாறன் அமைதியானவன், இவனுக்கு இவ்வளவு கோபமா? சந்திரசேகரத்தாருக்கு இந்த வாதங்களுக்கு நியாயம் தெரியவில்லை. அதைத் தடுக்கும் தைரியமும் வரவில்லை.




அவ்விடத்தில் நின்றால் தானும் ஏதும் பேச வேண்டி வரும் என்று நினைத்து, அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்.

"டேய் மாறன் சந்திரசேகரண்ணை செய்த இந்தப் பெரிய உதவியை நினைச்சு மனத்திருப்திப்படு. கொஞ்சநாளா அவற்றை வீட்டிலை இருந்த காரணத்துக்காக உன்னை வெளியிலை கொண்டு வந்தாரே. அதுவும் தன் பெறாமகன் எண்டு சொல்லி. இந்தப் பெருந்தன்மை ஆருக்கு வரும்" ஏற்கனவே கொதித்துப் போயிருந்த மாறனுக்கு இது எதுவும் காதில் ஏறவில்லை. மாறாக சீவகனின் தலைமயிரைப் பிடித்து இழுத்து குலுக்கியபடி,

"நீ யாருக்கு வக்காலத்து வாங்குகிறாய்?"

இந்தத் தாக்குதலை செவ்வேளும், சீவகனும் எதிர்பார்க்கவில்லை. தடுமாறிய செவ்வேள் மாறனைச் சமாதானப்படுத்தினான். மாறன் தன் உடுப்புகள், புத்தகங்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வீட்டைவிட்டு வெளியேறினான்.

காணவில்லை என்று தேடியபோது, சொந்தக்காரரின் வீட்டிலே கண்டு பிடித்தனர். "வீட்டிற்கு வாடா...." என்று செவ்வேளும் சீவகனும் மன்றாடியும் இருவரையும் விரட்டியடித்து விட்டான் மாறன்.

இந்தச் சம்பவத்தால் மாறனின் முகத்தில் விழிக்க சீவகனுக்கு மனம் கூசியது. இயலுமானவரை தவிர்த்து விட்டிருந்தான். வயிராறச் சாப்பிட்டுவிட்டு பணம் கொடுக்க எழுந்த போது செவ்வேள் உணவகத்தினுள் பதுங்கிய படி நுழைந்தான். செவ்வேள், சீவகனைக் கண்ட அதிர்ச்சியில் "இங்கே நிற்கிறாயா சீவகா?" என்றான். விசயத்தில் முந்தியவனாய் அதுவும் நக்கலோடு. முழுக்க நனைந்த பிறகு முக்காடு எதற்கு என்று நினைத்துக் கொண்டு சீவன்,

"டேய் செவ்வேள், நீ எதுக்கு வந்தியோ அதுக்குத்தான் நானும் வந்தேன்"

"செவ்வேள் நீ பசி பொறுக்க மாட்டாய். வீட்டிலும், சமைக்கவில்லை. நீ எங்கேயாவது சாப்பிட்டிருப்பாய் எண்டு நினைத்து நானே பசிதாங்காமல் சாப்பிட வந்தேன். குறை நினைக்காதையெடா" இருவரும் வீட்டு வாசலை அடைய அங்கே இன்ப அதிர்ச்சி இருவரையும் வரவேற்றது. அங்கே வாசற்கதவடியில் மாறன் மூட்டை முடிச்சுகளோடு காத்திருந்தான். யாரும் பேசவில்லை. மாறன் குனிந்த தலைநிமிராமல் தயங்கித் தயங்கி

"என்னைக் குறை நினைக்க வேண்டாம், பிழை விட்டிட்டன், உங்களுடன் வந்து இருக்கப் போகிறேன்"

பதில் எதுவும் சொல்லாமல் செவ்வேள் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போக மாறனும் போனான். இருவரின் மௌனம் சம்மதம் என்று அர்த்தமா? இது மாறனின் மனதைக் குடைந்த கேள்வி. செவ்வேளும் சீவகனும் ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். மாறனுக்கு முள்ளின் மேல் நிற்பது போன்ற உணர்வால் தலை குனிந்தான்.

"சரியெடா இனிமேல் திடீரென்று கோபம் வந்தால் வீட்டை விட்டுப் போய் விடாதே. சரிதானே.... எங்களை விட்டுத் தள்ளு, சந்திரசேகரம் அண்ணை நீ விட்டுப் போனதிலிருந்து மனம் நொந்து போயிருக்கிறார். இவர் மாதிரி ஒரு வீட்டுச் சொந்தக்காரர் கிடைப்பாரா? மூன்று பேரையும் தன் பிள்ளைகளாய் நினைச்சுக் கவனிக்கிறார். இப்ப நீ உணராமல்விட்டால் ஒரு நேரம் உணரவாய்" சீவகனின் உபதேசம் மாறனுக்கு உறைத்திருக்க வேண்டும். சரி... சரியென்றதற்கு அடையாளமாக புன்னகையோடு தலையை அசைத்தான்.

### கலிங்கத்துப் பரணி

போருக்காகப் பாடப்பட்ட இலக்கியங்களில் சிறப்பான இடம் கலிங்கத்துப் பரணிக்கு உண்டு. செயங்கொண்டாரால் இது பாடப்பட்டது. முதற்குலோத்துங்க சோழனுக்கு கப்பம் செலுத்தாத அனந்தபதுமன் எனும் கலிங்க மன்னன் மேல் தொடுத்த போர் பற்றிப் பாடியது. சோழனின் போர்த்திறமையை வியந்து பாடியதுபோல் காணப்பட்டாலும் மறைவாக போரின் கொடுமை பற்றி மன்னர்களுக்கு எழுத்துரைப்பதாக உள்ளது. கொலையும், குருதியும் போரில் வெறுப்பு வரும்படிக்கு வெளிப்படையாக சித்தரிக்கப்பட்டுள்ளது.

# சுவிற்சலாந்து



சுவிற்சலாந்து நாட்டை நாம் சுவிஸ் என்று அழைப்போம். இந்நாடு பரப்பளவில் இலங்கையை விட மிகவும் சிறியது. இங்கு ஏறக்குறைய 73இலட்சம் மக்கள் வாழ்கின்றார்கள். அவர்களில் 20 சதவீதமானவர்கள் வெளிநாட்டவர்கள். சுவிஸ் நாட்டின் நாணயம் சுவிஸ் பிராங். மூன்று சிறு மாநிலங்கள் ஒன்றிணைந்து 1291ஆம் ஆண்டு சுவிஸ் சமஸ்ரி என்ற ஓர் அமைப்பை உருவாக்கியுள்ளார்கள். சுவிஸ் நாட்டின் தலை நகரம் பேர்ண். இந்நகரம் 1848ஆம் ஆண்டிலிருந்து சுவிற்சலாந்து இந்த சமஸ்ரியில் சேர்ந்துள்ளது.

## மொழிகள்

சுவிற்சலாந்து நாட்டில் ஜேர்மன், பிரெஞ்ச், இத்தாலி ஆகிய மூன்று மொழிகள் அரச மொழிகளாக அங்கீகரிக்கப்பட்டுள்ளன. அதைவிட சுவிஸ் அரசாங்கம் ரோமானிய மொழியை ஊக்குவிக்குமுகமாக, அதற்கெனத் தனியான வானொலி, தொலைக்காட்சி நிலையங்களை உருவாக்கியுள்ளது. சுவிற்சலாந்து நாடுதான் ஐரோப்பாவிலேயே மிகவும் நடுநிலையைப் பின்பற்றும் நாடு எனலாம். கடந்த இரண்டு உலகப் போர்களினாலும் பாதிக்கப்படாததற்குக் காரணம் அதன் நடுநிலைமைக் கொள்கையே எனலாம்.

## அரசியமைப்பு

அரசியலமைப்பைப் பொறுத்தவரையில் 26 மாநிலங்களைக் கொண்ட ஒரு சமஸ்ரி அரசைக் கொண்டது. 26 மாநிலங்களுக்கும் சுயாதீனமும் அரசியல் இறைமையும் உண்டு. அவர்கள் தனித்து எந்த ஒரு முடிவையும் எடுப்பதற்கு உரிமை யுள்ளவர்கள். அவர்களுக்கென மாவட்டப் பாராளுமன்றங்களும் உள்ளன. இவற்றிற்கும் தனித்து இயங்கக்கூடிய உரிமைகள் உண்டு. கல்வி, சுகாதாரம், மருத்துவம், போக்குவரத்து போன்ற சேவைகளைப் பொறுத்தவரையில் மாநில அரசுகள் தான் முடிவுகளை எடுக்கும்.

## இயற்கை அழகு

சுவிஸ் நாட்டின் இயற்கை அழகில் அல்ப்ஸ் மலைத் தொடர் சிறப்பானது. நான்கு மொழிகள், நான்கு வேறுபட்ட பண்பாடு உள்ள மக்கள் ஒன்று கூடி ஒரு பாராளுமன்ற அமைப்பின் கீழ் அமைதியாகவும் ஒற்றுமையாகவும் வாழ்கிறார்கள். சுவிற்சலாந்து நாட்டின் மிகவும் முதன்மை வாய்ந்த நகரங்களாக சூரிச், ஜெனிவா, பேர்ண், கூர் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.



பாபு

## வணிகமும் உல்லாசத்துறையும்

சூரிச் நகரம் சுவிஸின் வணிக நகரம். அங்குதான் மிகவும் பிரசித்தி பெற்ற வங்கிகளும் மிகப் பெரிய கம்பனிகளின் தலைமைப் பணிமனைகளும் அமைந்துள்ளன. உலகில் மிகவும் பிரபலமான



நெஸ்லே நிறுவனத்தின் தலைமைப் பணிமனை இங்குதான் உள்ளது. இந்நிறுவனம் உலக மக்கள் தொகையினரில் ஒரு பங்கினருக்கு பாற்பொருட்கள், மற்றும் உணவுப் பொருட்களை வழங்கி வருகின்றது. அந்தளவிற்கு உலக அறிமுகம் இந்நிறுவனத்திற்கு உண்டு. இப்பணி-மனை சுவிஸ் நாட்டின் பிரெஞ்ச் பேசும் பகுதியிலுள்ள விவே என்னும் நகரத்தில் உள்ளது. மேலும் வாசல்ஸ் என்னும் நகரத்தில் சான்டோ, சீலக் என்னும் இரு வணிக நிறுவனங்களும் இணைந்து நொவாக்கீஸ் என்னும் நிறுவனத்தை உருவாக்கியுள்ளனர். இந் நிறுவனம் மருந்து உற்பத்திக்குப் பெயர் போனது. மேலும் இயற்கை வளங்களை நோக்கும்போது, சூரிச் நகரில் பெரிய குளம் ஒன்றுண்டு. இதனைச் சூரிச் சீ என்று அழைப்பர். இது ஒரு பெரிய சமுத்திரம் போன்றிருக்கும். இங்கு நீர் விளையாட்டு, படகோட்டம், அதிலும் குறிப்பாக படகுகளை இயந்திரங்களால் இயக்குதல், தண்டு வலித்தல் போன்றவற்றை





விளையாடலாம். கலை, பண்பாடு நிலையங்கள், மிருகக் காட்சிச் சாலைகள் போன்றனவும் இங்குண்டு. இதனைப் போலப் பொழுதைக் கழிக்க பல்வேறு அம்சங்களும் இங்குண்டு.

சுவிஸின் மிகப்பெரிய பல்கலைக்கழகம் (Federal technical school) சூரிச் நகரத்தில் தான் அமைந்துள்ளது. அங்கு மருத்துவம், தொழில்நுட்பம், கட்டிடக்கலை போன்ற துறைகளில் மாணவர்கள் பயிற்றுவிக்கப் படுகின்றனர். இந்நாட்டிற்குரிய அனைத்துலக விமான நிலையம் சூரிச் நகரத்தில் அமைந்துள்ளது. பொதுவாக சுவிற்சலாந்து நாட்டுக்கு வரும் மக்கள் இந்த விமான நிலையத்தில் தான் இறங்குகின்றனர். விமானத்திலிருந்து நாட்டிற்குள் போகவேண்டிய அனைத்து இடங்களுக்கும் புகையிரதச் சேவை விமான நிலையத்துடன் இணைந்தே இருக்கிறது.

## ஜெனிவா

ஜெனிவாவிலும் ஒரு அனைத்துலக விமான நிலையம் உள்ளது. இந்நகரத்தில் வாழும் மக்கள் பிரெஞ்ச் மொழி பேசுகின்றனர். ஐக்கிய நாடுகள் சபை சார்ந்த பல்வேறு அமைப்பு நிறுவனங்கள் இங்குண்டு. ஜெனிவா ஒரு அனைத்துலக நகரமாகவே கருதப்படுகின்றது. அனைத்துலக சர்வதேச நிறுவனங்களைப் பிரதிநிதித்துவப் படுத்தும் ஒரு நகரமாக இது செயற்பட்டு வருகின்றது. அனைத்துலக உணவு நிறுவனமும், அனைத்துலக தொழிலாளர் அமைப்பும் இங்கு தமது பணிமனைகளைக் கொண்டுள்ளன. சீக்கிலர் என்னும் பல்கலைக்கழக விரிவுரையாளர் இதன் அமைப்பாளராகச் செயற்பட்டு வருகின்றார். இவர் சுவிஸ் பாராளுமன்றத்தின் அங்கத்தவராக இருந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

அனைத்துலக செஞ்சிலுவைச் சங்கத்தின் தலைமைப்பணிமனையும் ஜெனிவாவிலேயே அமைந்துள்ளது. கட்சிச் சார்பற்ற மனிதநேய நடவடிக்கைகளை இவ்வமைப்பு செய்து கொண்டு வருகின்றது. சுவிஸ் நாட்டின் வெளிநாட்டுத் தூதரகங்கள் பலவும் ஜெனிவாவிலேயே உள்ளன. அரசியல்சார்ந்த கூட்டங்கள் இங்கு ஆண்டு தோறும் அடிக்கடி நடத்தப்படும். இயற்கை அழகாக ஒரு பெரிய வாவியை ஜெனிவாவில் குறிப்பிட முடியும்.

## பேர்ண்

பேர்ண் சுவிற்சலாந்து நாட்டின் தலைநகரம் ஆகும். இது ஒரு மிகப்பழைய நகரம். இங்கும் ஒரு பல்கலைக்கழகம் உண்டு. பேர்ண் நகரத்தைச் சுற்றி ஆறே என்ற ஓர் ஆறு ஓடுகிறது. இங்கு பல பொருட்காட்சிச்சாலைகளும், அரும்பொருட் காட்சியகங்களும் உண்டு. எந்தக் கல்வித்துறை என்றாலும் அதற்குப் பொருத்தமான அரும்பொருட்காட்சியகம் அங்கே உண்டு. பேர்ண் மக்கள் மிகவும் திறந்த மனதுள்ளவர்கள். பேர்ண் நகரில் தான் ஆயிரக்கணக்கான தமிழ்மக்கள் அகதிகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள். சுவிற்சலாந்து நாட்டுப் பாராளு மன்றமும் இங்குதான் அமைந்துள்ளது. சுவிஸ் நாட்டின் தேசியவங்கி பேர்ண் நகரத்தில் தான் அமைக்கப்பட்டுள்ளது. அரசியல் சார்ந்த பல்வேறு கட்சிகளின் தலைமைப் பணிமனைகளும் இங்கு உண்டு. பாராளுமன்றத்திற்கு அருகிலுள்ள நிலவறையில் சுவிஸ் நாட்டின் தங்கம் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. தங்கத்திற்கும் சுவிஸ் பிராங்கிற்கும் ஒரு நிலையான பெறுமதி உண்டு. சர்வதேச ரீதியில் மக்கள் சுவிஸ் வங்கியில் பணம் இருந்தால் தாம் பொருளாதார ரீதியில் பலமுள்ளவர்கள் என்று மார்தட்டிக் கொள்வது இதன் நிலையான பெறுமதியினாலேயே.

## கூர்

கூர் இருக்கும் மாநிலம் கிரபூண்டன். செயின் மொரிச் என்னும் இடம் பனிகாலத்தில் பனி சறுக்கும் விளையாட்டுக்கு உகந்த இடம். அங்கு உலகிலுள்ள மக்கள், மன்னர் சார்ள்ஸ் உட்பட பணக்காரரோ, அரசியல்வாதிகளோ மற்றும் மிகவும் வசதியானவர்களோ வந்து பனிச்சறுக்கல் விளையாட்டுகளில் பங்கு கொள்வர். மற்றைய நாடு மலைநாடு தவிர்ந்த சமதரையிலுள்ளது. இங்கு விவசாயம் செய்யப்படுகின்றது. இங்கு தானிய உற்பத்தி, பாற்பண்ணை குறிப்பாக, பாற்கட்டி (cheese) உற்பத்தி மிகவும் முதன்மை வாய்ந்தது.

# லங்காபுரம்

## படலம் 2



### தேவகாந்தன்

உடம்பில் பட்டிருந்த அலுப்பை உணர்ந்து விரைவாய் வெங்கிணாந்தி மரத்தையடைந்த நாகன் அவசர அவசரமாய்த் தளச் செப்பத்தைப் பார்த்து படுத்துக்கொண்டபோதிலும், அதிசயமாய் அவனுக்கு நித்திரை வரப் பின்னடித்துக்கொண்டிருந்தது. இலையுதிர் காலத்திலும் அவசியத்துக்குப்போல் சில இலைகளை உதிர்த்துவிட்டு இன்னும் செழிக்கச் சடைத்திருந்த மரக் கிளைகளில் அவன் பார்வையைப் படரவிட்டுப் படுத்திருந்தான். வீச்சான அசைவில் தம்முள்ளேயே மோதி இலைகள் எழுப்பிய சளசளப்பொலிகள் காதில் விழுந்துகொண்டிருந்தன. எங்கோ ஒரு பறவை அப்போது பறந்ததில் இறக்கைகளின் சடசடப்பொலியும் கேட்டது. இன்னும் மெல்லென உருண்டோடிய நீரொழுக்கின் சத்தமும் கேட்டான். முப்புறம் கடல் விரிய நின்ற அப் பூமியின் நடுவண் பகுதி மலைகளிலிருந்து சுரப்பெடுத்து லங்காபுரத்தின் பரந்த வயல்நிலங்களைப் பசுமையாக்கிவிட்டு அங்கேயே உறைவடைந்துபோகத் தூரவாய் ஓடிய ஒரு ஆற்றின் சப்த எழுகையே அதுவென்பதை மிகச் சுலபமாகவே தெரிந்தான் நாகன். அவன் என்றுமே காணாது ஒலி மட்டும் கேட்ட நதியாகவிருந்தது அது. மட்டுமில்லை. பெருமழைக்காலத்தில் பொங்கிப் பெருகி கண்டவற்றையெல்லாம் வாரிச் சுருட்டிக்கொண்டு எங்கே போய்த் தான் ஒழிகிறதென்பதையும் மறைத்து அது புதிர்கொண்டு விளங்கியது.




அது உற்பவமாகும் மலைப் பகுதியானது மர்மங்களின் முடிச்சுகளைக் கொண்டிருப்பதை அவன் அப்போது நினைத்துப் பார்த்தான்.

விலங்கினம்கூடச் சஞ்சாரமறுத்த வனங்களும், புகார்களின் கவிவால் காட்சி மறுக்கப்பட்டிருந்ததில் வெஞ்சினங்கொண்டு இன்னும் மேலே மேலேயென வளர்ந்துகொண்டிருந்த மலைகளுமான அப்பகுதி, உறவுகளைக் கைவிட்ட தேவதைகளின் குளிர் ஊர்களைக் கொண்டிருப்பதாய்த் தன் நெடும் பயணத்தில் எங்கோவொரு இடத்தில் அவன் சிலர் சொல்லக் கேட்டிருந்தான். தன் நிலக் கதைகளை வேற்று நிலத்தான் அறிந்து சொன்னது அவனுக்கு அதிசயமாகவே இருந்தது. ஆனாலும் அக் கணம்வரையில் அதுபற்றி அவனுக்கு மறுநினைப்பு எழுந்ததில்லை.

அப்போது எழுந்தது.

தேவதைகள் நீரில் மிதந்தும், காற்றில் பறந்தும் திரிந்தனராம். ஏதோவொரு தேவதை அப்போதுகூட அச் சலசலக்கும் நீரில் மிதந்து வருதல் கூடுமோவென ஒரு பிரமிப்பான எண்ணமெழப்பெற்றான் நாகன்.

தொடர்ந்து தேவதைகள் எப்படியிருப்பரென்ற கேள்வி அவனுக்குள் பிறந்தது. பனிமலைத் தொடர்த் திசையில் வடமேல் கணவாயினூடான வெண்மனிதர்களின்

வரவுக்குப் பிறகே அதுபோல் மிகவினிதான கதைகள் புனைவிலேறிப் பரவிக்கொண்டிருப்பதாய் கப்டபுரத்தில் ஒரு அந்தணன் சொல்லியிருந்ததையும் அப்போது நினைக்க அவனால் முடிந்தது. வடக்கின் பூர்வ இனக் குடிகளின் தேவதைகளை தெற்கில் நீரர மகளிர் என்பதாய்ச் சொன்னதும் அவ்வந்தணன்தான். அவ்வாறெனின் சீதை தேவதையா? என வினா பிறந்தது அவனிடத்தில்.

அயோத்தி என்ற தேசத்தின் சீதை என்பவள் அரசிழந்த தன் கணவனோடும் அவனிளவலோடும் வனம் திரிவதான கதையை நாகன் முன்பே அறிந்திருந்தான். முந்திய ஒரு பயண முடிவில் வந்து அதுபற்றி ராவணனுக்குத் தெரிவித்ததும் அவன்தான். ஆனால் அரசிழந்த கணவனோடு வனங்களினூடாய்ச் சீதை தென்புலம்நோக்கி நகர்வதாகவும், அவளின் பேரெழில் பற்றியும் அந்தணன் சொன்னது நாகனுக்குப் புதியவை. அவை அவ்வளவேயெனின் நாகனில் மறதியாகியிருக்கும். ஆனால் அந்தணன் சீதையைத் திருவென்றான். அவள் பொன் நிறமாய் ஒளி வீசுபவளாம் என்றான். அவள் செல்லும் திசையெங்கும் பொன்னொளிர் பரவிச்செல்லுமாமெனச் சொன்னான். அவற்றை நாகனது மறதி விழுங்க மறுத்தது. மட்டுமில்லை. நினைப்பிலிருந்து உறுத்தி ராவணனிடம் சொல்லத் துரத்தியும் விட்டிருந்தன.

எனினும் அவன் நித்திரையைக் குழப்பிய இடையூறுகள் அவைமட்டுமேயல்ல என்பதையும் அவன் அறியவே செய்தான். நதியின் குரல், வனத்தினொலி, ஊர் அரவங்களுள் அவனால் சுலபமாகத் தூங்கமுடியும். இது வேறொன்று. ஒரு பெருவிஷயத்தைச் சொல்வதற்காகவே அவனது வருகையில் அவசரம் பிறந்தது. அதில் அளப்பரிய ஒரு அழகின் சேதி இருந்தது. ஆனால் கரும் புகார்களின் மலைக்கவிவு கண்டபின்னால் ஏதோ ஒரு மனத் துயரத்துள் அவன் விழுந்துபோனான். கரும்புகார் அவன் கண்டுகொண்டிருக்கவே விலகிப் போயிற்றெனினும், அது மீண்டும் வந்து கவியாதென்பதற்கும் உறுதியேதும் இருக்கவில்லை. அது உற்பாதமாயிருந்தாலும், மழையின் அறிகுறியாயிருந்தாலும் எதுகுமே நல்லதுக்கில்லை. அது மழையாகவிருந்தால் நடையின் சாத்தியமான சகல இடையூறுகளையும் மறுநாள் அவன் சந்திக்கவேண்டியிருக்கும். இத்தகைய உணர் குவியலில் குளத்தின் கல் சலனமாய் வந்து கலந்திருந்தாள் வியாழியும். அவள்மேல் அவனுக்குப் பெருவிருப்பென்று ஏதுமில்லையெனினும், அவளே ஒரு தேவையாகியிருந்தாள் என்பதையும் நிராகரிப்பதற்கு இயலாதவனாயிருந்தான். அவளோடு கொண்ட உறவின் அனுபவ நாள்கள் வந்து
வந்து சுகம்செய்து
போய்க்கொண்டிருந்தன.
அவ்வேளையில் அவனுக்கு நித்திரை வந்து கவிந்தது. வீச்சான காற்று விசையடங்கி மெல்லென இழைய ஆரம்பித்துநின்ற பொழுதில் அந் நித்திரை மிகச் சுகமானதாகவிருந்தது அவனுக்கு. மனம் சலனமாகி உருவ அசைவுகள் கிளர்த்தாத அசதியான தூக்கம்கொண்டான்.

சிறிதுநேரத்தில் அந்த அசதிச் சுகம், பரிமாற்றம் பெற்று எழுச்சிச் சுகமாய் அவனது உடலில் திகைந்தெழுந்துகொண்டிருந்தது. அப்படியான ஒரு இடைப் பொழுதில் அவனுக்கு உள்விழிப்புப் பிறந்தது.

மாலையில் மும்மலைகளை மூடிக் கவிந்தலைந்த கரும்புகார் அப்போது தன்மேல் வந்து மூடி அசைவறுத்து நின்றுகொண்டிருப்பதுபோல் ஒரு பிரமை. பின்னர் தன்னை அமுக்குவதுபோல் ஓர் உணர்கையும். அப்படியே அது தன்னை அமுக்கிச் சாகடித்துவிடுமோ என்று மனம் பதறுவதற்கிடையில், நடுவுடம்பிலிருந்து ஒரு பரவசம் பொங்கிப் பிரவாகித்து ஒருபுறம் உள்ளங்கால் வரையுமாய், மறுபுறத்தில் உச்சந்தலைவரையுமாகப் படர்வதுபோல் தோன்ற, நாகன் மூச்சடக்கிக் கிடந்தான். இன்பம் கிளரக் கிளர தன்மேற் பாரமும் அதிகரிப்பதுபோல் தோன்றிற்று. இன்பத்துக்காக பாரத்தைத் தாங்கலாம்போல இருந்ததில் பேசாது கிடந்தான்.

ஒருபொழுதில் நரம்புகளின் புடைப்பு பொறுக்கவியலாததாய்ப் போக, இறுகத் தழுவியணைக்கும் வேகமெழப்பெற்றான் நாகன். கைகளை வீசியெறிந்து வாரியிழுத்தான். கண்களைத் திறந்து நோக்க, அம் மெல்லிய இருளில் வியாழி தெரிந்தாள். வெண்முகைப் பல் முனைகள் கீறுகாட்ட, அவன்மேலிருந்து வேகவேகமாக இயங்கிக்கொண்டிருந்தாள். இன்பச் சுரப்பின் காரணம் வெளித்தது. வெளியின் அவதானமிழந்ததாய்க் கணங்கள் கணங்களாயச் சுகம் நீட்சிபெற்றுப் பொழுது கழிய, மின்னல் வெடித்ததுபோல் வீரியம் சிதறி வெறி அடங்கினான் நாகன். வியாழியும் இயங்குதல் நிறுத்திக் களைத்தாள்.

ஒரு சிறுபொழுது உடம்பும் மனமும் நிதானப்படத் தேவைப்பட்டவளாய் அசைவற்றுக் கிடந்த வியாழி பின் வழிந்து அவனருகில் சரிந்தாள்.

இரவு தளர்ந்துகொண்டிருந்தது.

பேச்சும் அசைவுமற்றுக் கிடந்தவள் மெல்ல, “நாகரே” என்றாள்.

கரும் புகார்களின் மலைக்கவிவு கண்ட பின்னால் ஏதோ ஒரு மனத் துயரத்துள் அவன் விழுந்துபோனான்.

"ம்" என்றான் அவன்.

எப்படித் துவங்க என்பதுபோல் சிறிது தயக்கம் காட்டியவள் பிறகு கேட்டாள்: "நீர் பயணம் துவக்கி ரண்டு மழைக்காலமெண்டிறீர். இந்தக் காலத்தில் என்னை எப்பவாவது நீர் நினைத்திருக்கிறீரா."

நாகனுக்குச் சங்கடமாயிருந்தது. அவளது கனிவு அவனைச் சரியான பதிலைச் சொல்வதிலிருந்து பின்வாங்கியிழுத்தது. வியாழியின் விழிகளில் தசைச் சுக விளைச்சலை மாலையில் கண்டிருந்தான்தான். ஆனாலும் அத்தகு அன்பின் முறுக்கத்தை வியாழியில் அவன் நினைத்துப் பார்த்ததில்லை. அவன் தனிநடை போபவன். வாழ்வின் அந்தத்தைப் போலவே அதன் நீண்ட பயணத்திலும், அவன் துணை கொள்ளாதவன். துணை வேண்டாதவன். நாக நாட்டிலிருந்து எப்போதோ லங்காபுரம் வந்தவன், பயணியாயே தொடர்வதும், மீதிநாளில் ராவணன்கூடத் தங்குவதும், ஊர் அலைவதுமாய்க் காலத்தைக் கடத்திக்கொண்டிருந்தான். அதுவே அவனுக்குப் பிடித்திருந்தது.

"என்ன, எதுவும் பேசாமல்" என்று வியாழி மறுபடி உசுப்ப, "பயணத்தின் கடுமை அறியாமல் கதைக்கிறாய் நீ" என்று அவளுக்கு மறுமொழி புகலத் துவங்கினான் நாகன். "அதை நான் விரும்புறனெண்டாலும், பயணமானது தன்னில் சவாரிப்போருக்கு எண்டைக்குமே இதத்தைச் செய்ததில்லை. நாளை என்றபொழுதே எப்பவும் எதிர்பார்ப்பிலிருக்கும். தேடலே குறியாயிருக்கும். நாகவினத்தானாய் என் வாழ்வியலின் கூறுகளை வேறுவேறு நாடுகளிலையும் காணுகையில் நான் சிலிர்த்துப்போகிறன், வியாழி. அங்கையிருந்தெல்லாம் பல கதைகளை இஞ்சை காவி வாறன். அதுபோலை பல கதைகளை அங்கைஅங்கையும் விட்டுவாறன். புதிசு புதிசான நிலங்கள் காணும்போது என் நிலமாயும், புதுசு புதுசான மனிதரின் சந்திப்பில் உறவினர் சந்திப்பையும் என்னாலை இதில் உணர முடியுது. எல்லாமே என் நாடாய், எல்லாருமே என் உறவாய்ப் பாவனை பண்ண முடியுறது பெரிய பேறு. நானும் இதைத் தவிர வேறை நினைச்சதுமில்லை. வேறை அடைஞ்சதுமில்லை."

துளிதுளியாய்ப் பொழுது கழிந்துகொண்டிருந்தது. நாகன் அவளின் சுதாரிப்பைத் தெரிந்துகொண்டவனாய் சற்றேனும் தன் உள்ளக் கிடக்கையினைத் தெரிவித்துவிடும் உறுதிபெற்று மேலே சொன்னான்: "பெருவிருப்பம் செலுத்துறதுக்குரியவராய் இதுவரை யாரும் ஆனதில்லை எனக்கு. உன்னிலை எனக்கிருக்கிற விருப்பம் , மறைக்காமல் சொல்லுறதெண்டால், உடம்பு சார்ந்ததுதான். நீ இதை விளங்கிக்கொள்ளவேணும்."

இனி அவளே பேசட்டும் என்பதுபோல் சிறிதுநேரம் பேசாமல் கிடந்தான் நாகன்.

மவுனம் வெடித்து அருகெங்கும் சிதறிக்கிடந்தது. அதை மிகைப்பிப்பதாய் சூழலில் நதியினொலி, வனத்தின் முனகல். எங்கோ கொட்டும் பெருமழையில் குளித்துப்போல் வந்த மெல்லிய குளிர்ந்த காற்று மேனியை அளைந்துசென்றது.

அவளும் மனவலிப்படல் கூடுமோ. அவள் ஆசைவயப்படுபவள், ஆசையின் வதை படுபவளல்ல என்றொரு தீர்மானகரம் நாகனிடத்திலிருந்தது. அப்போது அது சிதறப்பார்த்தது.

ஆனால், "அதைவிடும்" என்று சுயம் மீளப்பெற்ற வியாழி கூறி உரை தொடர்ந்தாள்: "எல்லாரும் கட்டுக்குள் அடங்கிக் கொண்டிருக்கினம். நான் அடங்க மறுத்து ஓடிக் கொண்டிருக்கிறவள், அதிலையே இன்பமும் அடைகிறவள். எனக்கே இந்த ஈடுபாடு என்னில் வந்தது வியப்புத்தான்."

நாகனால் அவளது தோல்வியின் வலியுணர்வை உணரமுடிந்தது. ஒரு பெண்ணாய் நிமிர்ந்திருந்தவள் தாரமாய் அடங்க நினைத்ததை நாகனால் புரியமுடியவில்லை. அவள் ஒருவனை வரிக்காதவள். தனக்கானதாய்க் குழந்தைப் பேறை நினைத்தவள். காமத்திலும் தானே இயங்கியவள். வெளிப்புல மக்களின் நிறைந்த வருகைகள் வியாழியிலும் மாற்றத்தை உண்டாக்கியிருக்க முடியுமோவென எண்ணியபடி இருளில் அமுழ்ந்திக்கிடந்தான் நாகன்.

ஒருபொழுது கபாடபுரத்திலும் அதை அண்டிய ஊர்களிலுமிருந்து நிறையச் சிற்பிகளை குடும்பம் குடும்பமாக லங்காபுரம் வருவித்திருந்தான் ராவணன். பிரமாண்டமான மும்மலைக் கோவிலின் கட்டுமானப் பணி துவங்கியிருந்த காலமது. பின்னால் கோயில் பராமரிப்பு, கோயிற் சேவைகளுக்காகவும் பல ஆண்கள் பெண்களை லங்காபுரம் வரவழைத்து குடியமர்த்தியிருந்தான். ஆடற்கணிகையரின் வரவும் சுயாதீனத்திலும், வரவழைப்பிலுமாய் நிறைய இருந்தது. இயக்க நாக இனங்களோடு கலந்து அவர்களில் பலர் லங்காபுர வாசிகளாகவே ஆகிவிட்டிருந்தனர். அவர்களின் பழக்க வழக்கக் கூறுகள் பெரிதாக மாறுபட்டில்லையெனினும், ஆணும் பெண்ணுமாய் நிரந்தரமான ஒரு இணைவில் அவர்கள் வாழப் பழகிக்கொண்டிருந்தனர்.

பிறகு விஷய திசையை மாற்றவேண்டிப்போல் நாகன் கேட்டான்: "உன் மகன் இரவே வந்துவிட்டானா."

லங்காபுரம்

"வருவானெண்டுதான் எண்ணினன். பிறகுதான் கரும்புகார் வந்து கவிந்ததை அவனும் கண்டிருக்க ஏலுமெண்ட நினைப்பு வந்தது. அவனுக்கு இம்மாதிரிப் புகார்க் கவிவு, மின்னல்வெட்டு எண்டால் சரியான பயம்."

"எனக்கே பயம் வந்ததே. அவன் சிறுவன்தானே. பயப்படாமலிருக்க எப்பிடி ஏலும். அதுசரி, அவனுக்கு என்ன வயசாகிறது."

"தாயைப் பெண்டாளப் பாக்கிற வயசுதான்."

நாகன் புரியாமல் குழம்பினான்.

பின் அவள் சொல்லின் கனதி அறிகையாக அவன் அதிர்ந்துபோனான். மனமுளைந்து அவளிலொரு இரக்கம் பிறந்தது . அவனோடான இணைவுக்கான அவளது விருப்பம் ஒரு தப்புகைக்காய்ப் பிறந்ததோ என்று எண்ணமெழுந்தது. கூடி வாழ்தலில்கூட அடங்கிநிற்க மறுக்கிற ஆசை அவளது. இயக்க நாக இனத்தாரிலும் மணமுறை வாழ்தலின் ஒரு அம்சமாய்ப் பெருகிவரும் அக்காலத்தில், அவள் தன்னிச்சை மட்டுமே பிரதான-மாய்க் கொண்டலைபவள் என்பதை அவன் சரியாகவேதான் கணித்திருந்தான். அவளுக்கும்கூட ஒரு தேவைக்காயேனும் ஒருவனோடு கூடிவாழ்தல் அவசியமாகக் கூடுமென்பதையே அவள் தன் விருப்பை மறைமுகமாய் வெளியிட்ட தருணத்தில் நினைத்திருந்தான் நாகன். ஆனால் ஒரு தப்பியோடுகையே அதன் காரணமென்று தெரிந்தவளவில் அவளில் நாகன் உருகிப்போனான்.



அவள் உடம்பழகுகொண்டிருந்தவள். ஆனாலும் அதில் அவனுக்கு ஆகக் கூடுதலாய்த் தோன்றக்கூடியது ஆசைமட்டுமே. விருப்பம் கொள்ளுதல்களுக்கு அவன் அப்பாற்பட்டவன். மட்டுமில்லை. சீதையின் அழகுபற்றி கபாடபுரத்து அந்தணன் சொன்னது கேட்டபிறகு, அவன் அழகுகள்பற்றி நிறைய யோசிக்கவும் ஆரம்பித்திருந்தான். ஆடற்பெண்களின் அழகுகள் சிற்பங்களாய்க் கோவில் தூண்களில் ஏற்றப்பட்டிருப்பதை அவன் வியக்க வியக்க பல்வேறு நாடுகளில் கண்டிருக்கிறான். இனி அழகு என்ற அம்சத்தில் தவிர, அழகிகளில்கூட அவனால் விருப்பம் கொண்டுவிடமுடியாது.

வியாழியில் அவனால் கொள்ளக்கூடியது இரக்கப்படல் மட்டுமே.

மனத்திடமெழுந்ததும், "வியாழி, நீ போ. விடிகாலையில் என் பயணம். நான் சிறிது நித்திரைகொள்ளவேணும்" என்றான் நாகன்.

வியாழி நிமிர்ந்தமர்ந்தாள். போதையாவும் முறிந்திருந்தது அவளிடத்தில். கூரான முலைகள் நிழலுருக் காட்டின. அவளைப் பொறுத்தவரை, அவள்போன்ற எவர்களைப் பொறுத்தவரையும்கூட, முலைகள் பாலூட்டலுக்கானவை மட்டுமே. உடலின் வலிதையும் வாழ்ந்த காலத்தின் அளவையும்கூட காட்டுபவை. காமத்தின் அம்சமாய் அவை கருதப்படாத காலம் அது. பயணியாய் இருப்பதால் அவன் மட்டுமே முழு உடம்பும் போர்த்திய மாதர்களின் நாகரீகங்கள் கண்டிருந்ததில் அங்க வசீகரங்களுக்கு எழுச்சிப்பட முடிந்தவனாய் இருந்தான்.

வியாழி கேட்டாள்: "திரும்ப இந்த வழியால் எப்ப வருவீர்."

"அறியேன்" என்றான் நாகன்.

"வரும்போது என்னைக் காண்பீரா."

"காண்பேன். ஆனால் நீதான் வேறிடம்

அல்ஜீரியாவில் பிறந்த அல்பேக் காம்யூ கல்வியை அங்கு தொடரமுடியாத சூழல் ஏற்பட்ட நிலையில் பிரான்சினை அடைந்தார். இரண்டாம் உலகப் போர்காலத்தில் இவருடைய எழுத்துக்கள் இலக்கியமாகவும் சமூகவியற் கருத்துக்களாகவும் மதிக்கப்பெற்றன. இன்றும் மதிக்கப்படுகின்றன. 1957 இல் இவருக்கு நோபல் பரிசு கிடைத்தது. நவம்பர் 11 ஆவது திகதி பிறந்த காம்யூ 1960 இல் தனது நண்பரும் பதிப்பாளருமாகிய மிசேல் கலிமாருடன் மகிழுந்தில் பயணிக்கையில் விபத்தில் இறந்தார்.

செல்லப்போவதாய்ச் சொன்னாயே. வழக்கம்போல் எங்கள் சந்திப்பு எதிர்பாராததாய்த்தான் மறுபடியும் நிகழப்போகிறது."

"ஆருக்குத் தெரியும். ஒருவேளை நான் இங்கேயே தங்கியிருக்கவும் கூடும்."

வியாழி எழுந்து போய்விட்டாள்.

நாகன் வெகுநேரம் விழித்திருந்தான். ஒருபொழுதில் அவனறியாதே தூக்கம் வந்தது. அவ்வாறு எவ்வளவு நேரம் கழிந்ததோ. திடீரென்று உலுப்பப்பட்டதுபோல் துயில் கலைந்தான் அவன். அச்சம் உடல் முழுக்கப் பரந்திருந்தது. மேனியில் வியர்வையின் எறியங்கள்.

அவன் திடுக்கிட்டு எழும்பும்படிக்காய் என்ன நடந்தது. அவன் எதையோ கேட்டானா. அதுவும் மண்ணின் மடியுள்? சத்தம் பூமியுள்தான் கேட்டதா என்றும் ஒரு சமுசயம்.

அகழ்வாரை நிலம் தாங்கும். நிலத்தைப் பூமித்தாய் தாங்குவாள். பூமி பொறுமையின் வடிவமெனின் அவளாலும் ஆவேசப்பட முடியுமோ? பொழுதுகளில் முடியும்தான். ஆனால் அது ஆவேசத்தின் குரலாகவா இருந்தது? அவலத்தின் அழுகைபோலும் அது இல்லையே.

நீண்டநேரம் யோசித்தான் நாகன். அவனால் இப்போது ஒரு நிச்சயத்துக்கு வர முடிந்தது. அவன் நிலத்துள்ளிருந்து எழுந்த சத்தம்தான் கேட்டான். அதுவும் ஒரு தொடர் சத்தம். அவனால் என்றும் அறியப்பட்டிராத, என்றும் கேடகப்பட்டிராத ஒரு சத்த நிகழ்வு அது. ஒப்பிடக்கூடியதாய் அப்போது ஒரு சம்பவம் நெஞ்சில் அலையடித்தது. கோடை காலத்தில் ஒருநாள் அவன் தனி-வழி போய்க்கொண்டிருக்கிறான். கானகத்தின் ஊடறுத்து ஓடிய ஒரு கான்யாற்றின் பள்ளத்திலிருந்து உயிரை உலுப்பும்படியான ஒரு மிருகத்தின் தீனக்குரல் எழுகிறது. நாகன் திடுக்கிட்டுப்போகிறான். ஒரு உந்துதலில் ஓடிப்போய் பள்ளத்துள் பார்க்கும்போது புடைத்த மலைப்பாம்பொன்று ஒரு மானை இறுகச் சுற்றியிருக்கிறது தன் பெருத்த உடம்பினால். தலையை ஒருபுறம் நிதான-மாக வைத்துக்கொண்டு மானின் அவஸ்தையை அனுபவிப்பதுபோல் அமைதியாய்ப் படுத்துக்கிடக்கிறது அது. மான் உயிர் தப்பும் கடைசி முயற்சிபோல் ஒரு பயங்கரத் திமிறலைச் செய்கிறது நாகனின் கண் சாட்சியாக. மலைப்பாம்பு சிரிப்பதுபோல மெல்ல அசைந்து தன்னுள் ஒரு முறை சுருங்குகிறது. அவ்வளவுதான். மொடமொடவென்ற ஓசை. எலும்புகளின் நொருங்குகையோடு மான் துடிப்படங்குகிறது. காட்சியிலும் ஓசையிலும் விறைத்தவனாய் நிலைகுத்தி நின்ற நாகன், அவ்விடத்தைவிட்டு வெகுநேரத்தின் பின்னரே தன் வழி தொடர முடிந்திருந்தான்.

அவனுக்குச் சந்தேகமிருக்கவில்லை. அதேபோன்ற, ஆனால் அதைவிடப் பெரிதானதாயே அவன் நிலத்துள் எழுந்த சத்தம் கேட்டான். பெருங்கடலின் நெரிப்பில்

பூமித்தாயின்
ஏதோவொரு பாகத்தின்
எலும்புகள் உடைந்திருக்கின்றன.

மாலையில் மும்மலை கவிந்த கரும்புகார் நினைவெழ, அது விளையப்போகும் துக்கத்தின் முதல் அடையா-ளமென்றது அப்போது உறுதியானது நாகனுக்கு. அவனது உடம்பு மெல்ல நடுங்கியது.

நாகன் அப்படியே பணிய அமர்ந்திருந்தான் வெகுநேரமாய்.

மாக்கடல் திசையில் வெளுப்புத் தெரிந்தது.

(தொடரும்)

ஜேர்மனியர்கள்
பிரான்சில் இரண்டாம் உலகப்போரின போது நுழைந்தது போலவே பிரஞ்சு தளபதியான நெப்போலியனின் தலைமையில் படைகள் பெர்லினைக் கைப்பற்றி சிலகாலம் வைத்திருந்தன. இது 1808 இலிருந்து 1814 வரை நிகழ்ந்தது.

# இனியவர்கள்

'மெல்லிய ஒளியில் தெரிந்தும் தெரியாமலும் இருந்த அந்த நிழல்படங்களில் ஒரு கலைநயம் துலங்கியது. புலம்பெயர்ந்த சூழலில் தயாரிக்கப்பட்ட இந்தப்படம் சற்று வித்தியாசமாக இருக்கலாம் என்ற உணர்வு தூண்டியது. அரங்கிற்குச் சென்றவேளை ஆச்சரியம். பெரும் மக்கள் கூட்டம். இனியவர்கள்: கதை பொதுவாக புலம்பெயர்ந்த சூழலில் பேசப்படும் கதை. ஆண்-பெண் வாழ்க்கைத் துணையில் ஏற்படும் பிரச்சினை. இதனைக்கொண்டு ஆடல், பாடல் விரைவான கதை நகர்வு, திகிலடைய நகரும் கதை என ஒன்றரை மணிநேரம் மக்களை திரையோடு கட்டிவைத்திருக்கும் கலையில் பெருமளவு வெற்றிபெற்றிருக்கின்றார் இளம் இயக்குநர் லெனின் என்றுதான் கூறவேண்டும்.



இனியவர்கள் இயக்குனர் லெனின்

கதையின் பிற்பகுதியில் நம்பகத்தன்மை, காட்சிகளை அதிகப்படுத்தி வசனங்களைக் குறைப்பது, விளம்பர நோக்கோடு சில நிறுவனங்களைக் காட்சிப்படுத்தியமை, பட ஓட்டத்தைக் கொஞ்சம் விரைவாக்குதல் போன்றவற்றில் அதிகம் அக்கறை செலுத்தியிருந்தால் தரத்தை மேலும் மேன்மைப்படுத்தியிருக்கலாம். கதாநாயகனாக நடித்த சுதன் அவர்களின் நடிப்பு பாராட்டுக்குரியது.



'இனியவர்கள்' படத்தில் மடோனா, சாஞ்சோ, இம்மான், சுதன்

'கரைதேடும் அலைகள்' திரைப்படத்தில் பத்மரவி-ரஞ்சி

### ஈழத்தமிழரின் படமா, இந்தியரல்லாதவரின் படமா?

ஈழத் தமிழர் தயாரிக்கும் 'மனதோடு மழைக்காலம்' பட விழாவில் தமிழ் இயக்குனர் பாலுமகேந்திரா இரட்டிப்பு மகிழ்ச்சி தெரிவித்தார். ஷாம், நித்யாதாஸ் நடிக்கும் இப்படத் தொடக்க விழாவில் பாலுமகேந்திரா "இந்த படத்தின் தயாரிப்பாளர் இந்தியர் அல்லாத தமிழர் என்று கூறினார்கள். அது என்ன இந்தியர் அல்லாத தமிழர்? ஈழத் தமிழர் என்று சொல்ல வேண்டியதுதானே. இப்படிச் சொல்வதில் எனக்கு இரட்டிப்பு மகிழச்சி. அவர்களில் ஒருவன் நான்."என்றார். இதன் இயக்குனர் அற்புதன். முதல் காட்சியை எஸ்.பி.முத்துராமன், கே.எஸ்.ரவிகுமார் படமாக்கினார்கள். தயாரிப்பாளர் அந்தோணி விழாவிற்கு வராததை சுட்டிக்காட்டியபோது, "5 தமிழ்ப்படங்களை தயாரியுங்கள் அதன் வெற்றிவிழாவிற்கு வருகிறேன்" என ஈழத்தவரான அந்தோணி தெரிவித்ததாக தயாரிப்பாளர் சக்திவேல் கூறினார்.

### விஜய்: கதறிய மாமியாரும் இலங்கை மருமகளும்

சென்னை நீதிமன்ற வளாகத்தில் விஜய், இயக்குனர் பேரரசு ஆகியோரின் படங்களும் பொம்மைகளும் கொளுத்தப்பட்டன. கொளுத்தியவர்கள் வழக்கறிஞர்கள். விஜய், "தமிழன்", "சுக்ரன்" படங்களில் தானே வக்கீல்களின் பெருமையை பறைசாற்றும் வகையில் நடித்திருப்பதை குறிப்பிட்டு அறிக்கை வெளியிட்டுள்ளார். "சிவகாசி"யில் நான் சொன்னதை செய்யும் நடிகன் மட்டுமே!..என் உருவத்தை தீயிட்டு கொளுத்திய காட்சியை தொலைக்காட்சியில் பார்த்த என் தாயும், என் மனைவியும், என்னை உயிராக நேசிக்கும் ரசிகர்களும் கதறினார்கள்."

### நல்லபடத்துக்கு முயற்சி

"குடிசை", "நண்பா நண்பா", "ரெண்டும் ரெண்டும் அஞ்சு" போன்ற ஓரளவு நல்ல படங்களை இயக்கியவர் ஜெயபாரதி. வணிகக் காட்டாற்றில் இவரது கலை இலை மாதிரி அடித்துச்செல்லப்பட்டது. எனினும் அடுத்த முயற்சிக்கான 'குருஷேத்திரத்தை' துவக்கி உள்ளார் ஜெயபாரதி. இது பாரதப்போரை குறிக்கும் சொல். கடந்த ஐம்பத்தைந்து ஆண்டுகளாக பாகிஸ்தானுடன் நடத்திவரும் நேரடி மற்றும் மறைமுகப் போர்தான் கதைக் களம். சத்யராஜ் இதில் நாயகனாக நடிக்க, ரோஜா, தலைவாசல் விஜய், பாரதி மணி ஆகியோரும் உடன் நடிக்கின்றனர்.

### ஒரு படத்துக்கு பின் நடிப்பு பயிற்சி

"ராம்" படத்துக்குப்பிறகு "ஈ" போன்ற படங்களை தேர்ந்து நடித்து வரும் ஜீவா, நாசரிடம் பயிற்சி எடுத்து வருகிறார். "எப்படி உள்வாங்கி நடிக்கணும் என்பதை நாசர் நன்கு சொல்லி தர்றார்." என்று பக்குவமாக பேசும் ஜீவாவுக்கு நல்ல நடிப்பு வாயப்புக்கள் வரலாம்.

விக்ரம் ஆங்கிலப்படத்தில் நடிக்கலாம் என செய்தி வந்திருக்கிறது. விக்ரமுடன் நடிக்கும் இன்னொரு பிரபலம் அமிதாப்பச்சன். சென்னை வந்த அமிதாப்பச்சன் மகன் விக்ரமை சந்தித்து வாழ்த்துக்கள் பரிமாறிக் கொண்டாராம். அமிதாப் குடும்பம் சீயானின் தீவிர ரசிகர்கள். விக்ரமின் அனைத்து படங்களையும் விரும்பிப் பார்ப்பது இவர்களின் பொழுது போக்கு.

### ஆந்திர நாட்டில் தமிழர் படையெடுப்பு

2005-ல் தெலுங்கு ரசிகர்களை பெரிதும் கவர்ந்தவை தமிழ்ப்படங்கள். "அந்நியன்" தெலுங்கில் பெரிய வெற்றி பெற்றிருக்கிறது. படங்களில் அதிக வரும்படி என்றார்கள். சிம்புவின் "மன்மதன்", சூர்யாவின் "கஜினி" ஆகியவையும் சிறப்பான வரவேற்பை பெற்றிருக்கின்றன. படங்களின் நிலை இப்படியென்றால் இதற்கு ஒரு படி மேலே நட்சத்திரங்கள். ஜோதிகா, தமிழில் காணாமல் போன சினேகா, "காதல்" சந்தியா என பலரும் பல தெலுங்குப் படங்களில் நடிக்கின்றனர். தெலுங்கு முன்னணி தயாரிப்பாளர்களும், இயக்குநர்களும் விக்ரமை வைத்து படமெடுக்க, தொடர்ந்து சென்னைக்கு படையெடுத்த வண்ணம் உள்ளனர். ஒருகாலத்தில் ஆட்சியைக் கைப்பற்றிய தெலுங்கின் ஆதிக்கம் தமிழ்நாட்டில் கொடி கட்டிப் பறந்தது. தற்போது தமிழ் திரையுலகாவது அதைத் திருப்பிச் செய்கிறதே!

### விருதுப்படம்

விருதை தவற விட்ட சேரனுக்கு மீண்டும் ஒரு வாய்ப்பு. இந்த முறை சேரன் நடிக்கும்



படத்தை இயக்குபவர் ம
முன் இயக்கிய "பொந்த
பெற்றுத்தந்தது. "பாடம் ஒ
பெற்றுத்தந்தது. தற்போது
நடிக்கிறார். விவேக், மே
கலாபவன்மணி ஆகியோ
இந்தப்படத்திற்கு இசைய

### பாராதிராசாவின் கடி

"தையல் எந்திர
பாரதிராஜா விஜயகாந்தி
தமிழகத்தை திரையுலகின
இணைந்து பழகி போராடி
காரியங்களை சாதித்துவிட்
வேடிக்கை. கையூட்டு கெ
இமயம். "நானும் லஞ்சம்
வேலை" என்ற விஜயகாந்

### சத்தியராசின் வாழைப்ப

நாத்திகவாதியான
நம்பறதில்லை. அதனால்து
பாபாவினால் தனது படம்
மீண்டும் ஒரு சிக்கல். ரஜி
கேட்டிருக்கிறது அதன் இ
என்று பாட்டுப்பாடி பதிய
சத்தியராஜ், "என்னோட ப
கேட்டு சொல்லுங்க" என
லூாசியானாவில் புயல் மா
கொடுத்தால் கோவை நெ
அமைதிப்படையாகிவிட்டது

ாள இயக்குனர் டி.வி. சந்திரன். இவர் சில ஆண்டுகளுக்கு
ன்" மலையாள படம் மம்முட்டிக்கு தேசிய விருது
ஒரு விலாபம்" படம் மீராஜாஸ்மினுக்கு தேசியவிருது
வி. சந்திரன் இயக்கும் "ஆடும் கூத்து" படத்தில் சேரன்
ா, சுகுமாரி, பாண்டியராஜன், இயக்குனர் சீமான்,
"ஆடும்கூத்து" படத்தில் ஒப்பந்தமாகியுள்ளனர். இளையராஜா
கிறார்.

காடுப்பவரெல்லாம் தலைவனாகிவிட முடியாது" என் பேசிய
ழலை ஒரு பிடிபிடித்தார். "கடந்த முப்பது ஆண்டுகளாக
ர் ஆண்டு வருகிறார்கள்...ஆனால் அவர்கள் மக்களுடன்
ந்த நாற்காலிக்கு வரவேண்டும்"..."சிலர் கையூட்டு கொடுத்து
இப்போது கையூட்டை ஒழிப்பேன் என்று சொல்வது
தும்போதே ஊழல் தொடங்கிவிடுகிறது" என்றார் இயக்குனர்
டுத்திருக்கிறேன். லஞ்சத்தை ஒழிப்பதுதான் என் முதல்
பேச்சைதான் இப்படி பாரதிராஜா கிழித்திருக்கிறார்.

ஊசி

யராஜுக்கு கேலி பெரும் துணை. "நான் கடவுளை
இங்கிலீஷ்காரன் படம் நூறுநாள் ஓடியது" என்று ரஜினியின்
பதாகச் சொன்ன கதைக்கு ஆப்பு வைத்தார். இப்போது
ன் சிவாஜி படத்தில் வில்லனாக நடிக்க, சத்யராஜை
னர் தரப்பு. இளம் நடிகைகள் மத்தியில், "உம்மா உம்மம்மா..."
ர் தரத்துக்கு உலவிவரும் நான் வில்லனா? கடுப்பாகிப்போன
ல ஒரு வில்லன் வேடம் இருக்கு. ரஜினி நடிக்கிறார்ானு
த்தையில் நாலுகிலோ நக்கல் தடவி கேட்டிருக்கிறார்.
எதிர் முனையில் கல்வரம். இதற்கு மேல் வாய்
னர் கொடுக்குக் கேலி செய்தே கொன்றுவிடுவார் என்று
ர்தரப்பு "கேரக்டரையே புரிஞ்சுக்க மாட்டேங்கிறாங்களே"

## அது ஒரு கனாக்காலம்



பாலுமகேந்திராவைப் பற்றி நாம் எண்ணுவது "அது ஒரு கனாக்காலம்" என்றுதான். சொற்பமான கதாபாத்திரங்கள், தெளிவாக உணர்ந்து சுற்றி வளைக்காமல் செதுக்கியுள்ள திரைக்கதை இந்த இரண்டிலுமே கெட்டிக்காரத்தனத்தை காட்டிக்கொள்ளும் பாலு பழையபடி தெரிகிறார்.

காதல் - காமம் - சோகம் - துயரம் அத்தனை உணர்ச்சிகளையும் விழிகளில் வடியவைக்கும் ப்ரியாமணி நடிப்பில் கையொலி வாங்கியிருக்கிறார். முதல் பாதியில் இளையராஜாவின் பின்னணி சிறக்கிறது. ஒளிப்பதிவு, எடிட்டிங் இந்த இரண்டில் மட்டுமே பாலுமகேந்திரா தென்படுகிறார். மற்றபடி காணவில்லைப் பாலுமநேகிராவை. பாலு மகேந்திராவிடம் கற்றுக் கொள்ள உளிப்பதிவு, ஒளி அமைக்கும் வகை, கோர்ப்பு இப்படிப்பல இளைய தலைமுறைக்கு உள்ளன. ஆனால் அவருடைய கதைகளோ, திரைக்கதைஅமைப்போ அல்ல.



# "கட்டுடைத்" தலைவி குஷ்புவும்... இலக்கியப் பூசாரிகளும்.... "

எப்படி ராமர் மேல் பாசம் பொத்துக் கொண்டுவந்து ரத யாத்திரையை ஆரம்பித்த அத்வானிக்குப் பின்னயில் மண்டல் கமிஷன் பிரச்சனை பயமுறுத்திக் கொண்டிருந்ததோ....

அப்படி
தமிழகத்தின் கட்டுடைத் தலைவி குஷ்புவின் பிரச்சனைக்குப் பின்னே தங்கர்பச்சானின் விவகாரம் நிழலாடிக் கொண்டிருந்தது.

நாளை மழலையர் வகுப்பின் நேர்முகத் தேர்வுக்குத் தயாராகும் குழந்தையிலிருந்து தமிழகத் தேர்வாணையக் குழு தேர்வுக்கு (வைத்தால்....) தயாராகும் இளைஞர்கள் வரைக்கும் இது துல்லியமாகத் தெரியும்.

அது சரி...அதென்ன கட்டுடைத் தலைவி என்கிறீர்களா?
நமக்குக் காப்பியங்கள் கற்றுக் கொடுத்ததெல்லாம்
வளை கழலுதல்...
பசலை படர்தல்....
உண்டி சுருங்குதல்...
போன்ற கண்றாவி இலக்கணங்களுக்குள் சுருங்கிப் போன பாட்டுடைத் தலைவிகள்தான்.

ஆனால் உழைக்கும் வர்க்கத்திற்கு இந்த உலகத்தின் எந்த மூலையில் ஒரு சிறு கீறல் ஏற்பட்டாலும் சீறி எழுகிற "ஜாக்பாட்" தலைவியாக ஒரு புறமும்...பெண்களைச் சுற்றியுள்ள தளைகளைத் தகர்த்தெறிகிற...சகல கட்டுகளையும் கட்டுடைத்து எறிகிற மறு புறமும் கொண்ட குஷ்புவை எப்படி நாம் வெறுமனே பாட்டுடைத் தலைவியாக விளிக்க இயலும்....?

சரி இவர்தான் கட்டுடைத் தலைவி என்றால் இவர் பேட்டியளித்த பாலியல் வணிகப் பிதாமகராய் இருக்கிற இ.டு (அதாவது இன்றைய இந்தியா) இருக்கிறதே...அது மட்டும் என்னவாம்....?

பிறந்த 230 நாட்களுக்குள் செக்ஸ் வைத்துக்கொள்ள விரும்பும் குழந்தைகள்:

| | |
|---|---|
| புது தில்லி | 35% |
| கொல்கத்தா | 41% |
| சென்னை | 24% |
| ஆண்குழந்தைகள் | 69% |
| பெண் குழந்தைகள் | 20% |
| கருத்தில்லை | 11% |

என ஆரம்பித்த காலத்திலிருந்து இன்றைக்கு வரையில் கருத்துக் கணிப்பிலேயே காலத்தை ஓட்டிக் கொண்டிருக்கும் பத்திரிக்கைதான் இ.டு.

முன்னொரு காலத்தில் இதைக் கிழித்து மலத்தைத் துடைக்கக் கொடுத்தவர்களும் உண்டு. கிழித்தது தெரியாமல் ஒட்டவைத்து புத்தகம் நடுவே குட்டி போடும் மயிலிறகாய் மடித்து வைத்துக் கொண்டவர்களும் உண்டு.

திருமதி.குஷ்பு இ.டு.வுக்குக் கொடுத்த பேட்டியில் அதாவது இ.டு.வின் குல வழக்கப்படி எடுத்த கருத்துக் கணிப்புகள் மீதான கருத்தைச் சொன்னதில் எந்தப் பிழையும் இல்லைதான். ஆனால் அதன் பிறகு அதன் மீதான ஒரு கேள்விக்குக் குமுறி எழுந்து ஒரு நாளிதழிடம் "இந்த ஊர்ல "அது"க்கு முன்னாடி "அது" நடக்காத ஆம்பள பொம்பள யார் இருக்கா? எடுத்துக் காட்டு உன் லிஸ்ட்டை..." என எகிறியதுதான் அவர் செய்த மகாதப்பு.
(அப்படிச் சொல்லவேயில்லை என்றார் குஷ்பு)

எனக்குத் தெரிந்து
"உன்னைப் போல் பிறரையும் நேசி"
என்றுதான் ஏதோ ஒன்றில் சொல்லப் பட்டிருப்பதாக ஞாபகம்.
ஆனால் "உன்னைப் போல் பிறரையும் யோசி" என்று எங்கும் படித்ததாக நினைவில்லை.

அப்படி அவர் திருவாய் மலர
கண்டனங்கள்...
ஆர்ப்பாட்டங்கள்....
கொடும்பாவி எரிப்புகள்...
மனம் திறந்த....
மனம் திறக்காத நேர்காணல்கள் என ஓடிப் போனது ஒரு மாதம்.

ஆனால் வேறு சிலரோ.. எங்கியோ போற மாரியாத்தா எம் மேல வந்து ஏறாத்தா என்கிற மாதிரி போகிற போக்கில் பெரியாருக்கு ரெண்டு சாத்து.

"பெரியார் சொல்லாததையா சொல்லிவிட்டார்...?"

சனிப் பொணம் தொணை தேடும்கிற கதையாக "குஷ்பு மட்டுமா சொன்னார்? சுகிர்தராணி கூட அப்படித்தான் ஆப்படித்தார். அவர் மட்டும் ஒழுங்கா? அவருக்கும் கொளுத்து கொடும்பாவி..." என போட்டுக் கொடுக்கிற வேலைகள்....

"தங்கள் இனப் பொண்ணுக்கு இப்படி ஒரு எதிர்ப்பா என்று கல்பாக்கத்திலிருந்து கஜகஸ்த்தான் வரைக்கும் இஸ்லாமியப் பெண்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள்" என்ற தினமலரின் புருடாவுக்குப் பலியான த.மு.மு.க. வினரைப் பார்த்து....

"தமிழ் முஸ்லிமா இருந்தா நீ இப்படிச் செய்வியா?" எனக் காட்டிக் கொடுக்கிற வேலைகள்....

என்னமோ திருமாவளவன் பாப்பாப் பட்டியையும், கீரிப் பட்டியையும் வரைபடத்தில் மட்டுமே பார்த்த மாதிரியும்....

அவை இரண்டையும் பொதுத் தொகுதியாக்கு என முக்குலத்தோருடன் சேர்ந்து மனுக் கொடுத்த மாதிரியும்....

"பாப்பாப்பட்டியையும் கீரிப்பட்டியையும் விட இந்தப் பிரச்சனை ரொம்ப முக்கியமா?" எனத் திருமாவளவனுக்கும் ஒரு ஆப்பு.

(ஆக பொதுவான கலை பண்பாடு கலாச்சாரம் குறித்த பிரச்சனைகளை எல்லாம் நாங்கள்தான் பேசுவோம். தலித் தலைவர்கள் அவர்களது பிரச்சனைகளை மட்டும் பார்த்துக்கொண்டு போனால் போதுமானது என்கிற தொனி)

ஆக இங்கு என்னதான் நடக்கிறது?



அடுத்து தங்கருக்கு வருவோம்.

தங்கரைப் பொறுத்தவரை அடி எது என்று கண்டுபிடித்தால்தான் நுனி குறித்தும் பேசமுடியும்.

"பெரியாருக்கும் மேலே திருமாதான்" என்றதிலாகட்டும்......

"தாய் பாத்திரத்தில் நடிக்க மறுக்கும் இவர்களுக்கு பிள்ளையே பிறக்கக் கூடாது" என்று சாபம் விட்டதிலாகட்டும்...

"................விபச்சாரிகளுக்கு ஒப்பானவர்கள்" என்றதிலாகட்டும்.......

எதுவுமே நாம் ஏற்றுக்கொள்ளக் கூடியவை அன்று.(அப்படிச் சொல்லவேயில்லை என்றார் தங்கர்பச்சான்)

ஆனால் இவர்கள் குஷ்புவை "கற்பு" விஷயத்தில் பிடித்துக்கொண்டது மாதிரி தங்கரை "விபச்சாரிகள்" விஷயத்தில் பிடித்துக் கொண்டது திரைத்துறை.

சொன்ன தங்கர்பச்சானாகட்டும்........
"தட்டி"க் கேட்ட திரையுலகமாகட்டும்..........
ஒட்டுமொத்த பின் நவீனத்துவ ஹோல்சேல் வியாபாரிகளாகட்டும்........

சொல்ல மறந்த கதையைப் போல கேட்க மறந்த கதை ஒன்றுண்டு.

அதுதான்......
"விபச்சாரிகள்" குறித்தது.

"விபச்சாரிகள்" என்றழைக்கப்படும் பாலியல் தொழிலாளர்கள் எந்தவிதத்தில் இவர்களை விடக் குறைந்து போனவர்கள் என்பதுதான்.

அதிலும் நடிகைகளை விபச்சாரிகளுடன் ஒப்பிடும் அளவுக்கு எப்படி தைரியம் வந்தது தங்கருக்கு என்பதுதான் நமது கேள்வி.

வலியோருக்கு வால் பிடிக்கும் இச் சமூக அமைப்பால் விளைந்த மற்றொரு விளை பொருள்தான் விலைமாதர்கள் என்பது பெண்ணியம் தெரிந்த எவருக்கும் புரியும்.

இந்த மண்ணில் எந்தப் பெண்ணும் "விபச்சாரத்தை" பொழுதுபோக்குக்காக ஏற்றுக் கொண்டவர்களல்ல. வாழ வழியற்று கால் வயிற்றுக்கஞ்சிக்குக் கூடக் காலணா காசில்லாமல் துயரத்தைச் சுமந்தபடி இத் தொழிலுக்கு வந்தவர்கள்தான் அவர்கள்.

இச்சமூக அமைப்பில் ஒரு சிறு புள்ளி பிசகினாலும் எனது தாய்க்கும், துணைவிக்கும், தங்கைக்கும் கூட இதேகதிதான் ஏற்படும் என்பது எதார்த்தமான உண்மை. அவர்களும் வாழப் பிறந்தவர்கள்தான். அவலத்தின் உச்சத்தில் வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கும் அச்சகோதரிகளை நடிகைகளோடு ஒப்பிட

### நயாகரா வீழ்ச்சியும் தமிழும்

உலக அதிசயங்களில் ஒன்றான நயாகறா நீர்வீழ்ச்சியைச் சுற்றி வாழ்ந்தவர்கள் இனுவிட் இன செவ்விந்தியர்கள். இவர்கள் தங்கள் மொழியில் நயாகரா நீர்வீழ்ச்சியை "ஓங்குயரா" என்று அழைக்கின்றார்கள். பேராசிரியர் இரா. மதிவாணன், "ஓங்குயரா" என்பதன் வேர்ச்சொல், தமிழ்ச்சொல்லாக இருக்கவேண்டும் என்று ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அந்த மொழியில் அதன் பொருளும் ஓங்கி உயர்தல் என்றே இருந்தது. ஒலி அமைப்பிலும், பொருள் அமைப்பிலும் தமிழோடு இந்தச் சொல் ஒன்றிப்போகின்றது. இதனை வைத்துக் கொண்டு பெரும் முடிவு எதற்கும் வரமுடியாது ஆனால் இந்த இனோவிட் இனச் செவ்விந்தியர் களுக்கும் பண்டைய தமிழ்மொழிக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரலாம் என்று கூறினார் வேர்ச்சொல் மொழியறிஞர்

இரா. மதிவாணன்

பறை

தங்கர்பச்சானுக்கு எப்படி மனது வந்தது? நடிகர் நடிகையர் மீது ஆயிரம் கோபம் இருக்கலாம். நேரடியாக சண்டையிடட்டும். பதிலுக்கு அவர்கள் கருத்தை எதிர் கொள்ளட்டும். தவறில்லை. ஆனால் அதற்காகவெல்லாம் அவர்களை பரிதாபத்துக்குரிய ஜீவன்களோடு ஒப்பிட்டு பாலியல் தொழிலாளிகளை இழிவுபடுத்துவது பெண்ணுரிமையைப் பேசும் தங்கருக்கு எந்தவிதத்தில் அழகு?

நடிகர் நடிகைகளைப் புண்படுத்தினால் கொடி பிடிக்கவும், குரல் கொடுக்கவும் ஆயிரம் சங்கங்கள் இருக்கிறது. ஆனால் அந்த அப்பாவிப் பெண்மகளுக்கு....?

“கைம்பெண்கள்....கணவனால் கைவிடப்பட்டவர்கள்..... விபச்சாரிகள் எனப்படுவோர் யாவரும் தவறாது கலந்து கொள்ள வேண்டும்” என தந்தை பெரியார் தனது மாநாட்டுக்கு அழைப்பு விடுத்து ஆண்டுகள் எவ்வளவு ஆயிற்று?

ஆனால் 2005லும் தங்கர் “விபச்சாரிகள்” குறித்துப் புரிதலில்லாமல் பேசுகிறாரே என்கிற போது நமக்கு சினமும் வருத்தமும் மேலிடாமலில்லை.

ஆனால்....

தங்கர்பச்சான் அந்த ஒரு பேட்டிக்காக மட்டுமே தாக்கப் படவில்லை.

அதைப்போன்றே குஷ்புவும் அந்த ஒரு கருத்துக்காக மட்டுமே குறிவைக்கப்படவுமில்லை.

நம்மைப் பொறுத்தவரையில்
பறையை
மொழியை
பண்பாட்டை
தனது படங்களில் முன் மொழிந்தாலும் இன்னமும் தங்கர் செழுமைப்பட்டாக வேண்டும் என்கிற பார்வை நமக்கு.

அரைவேக்காடாய்ச் சொன்னாலும் இவனெல்லாம் நமது பிழைப்பிற்கு எதிரியாயிற்றே என்கிற கவலையும் எப்படியாவது ஒழித்துக்கட்டியாக வேண்டும் என்கிற திட்டமும் சமூகப் பொறுப்பற்றவர்களின் கைகளில் சிக்கிக்கிடக்கும் திரை உலகிற்கு.

அதுவே அவர்கள் தங்கள் இலக்கைத் தீர்மானிக்கப் பிரதான காரணம்.

அவர்களுக்கு இலக்கு தங்கர்பச்சான் கிடையாது. அவர் முன்நிறுத்தும் அரசியல்.

இவர்களது இலக்கும் குஷ்பு கிடையாது.

அவருக்குப் பின்னே நின்ற நடிகர் சங்கமும் அதனது அரைவேக்காட்டுத் தலைவரும்.

( நட்சத்திரக் கலை விழாக்கள்.... நெய்வேலிப் போராட்டம் தொடங்கி.... சகல சாவு மற்றும் கல்யாண வீடுகள் வரைக்கும் தன்னை மட்டுமே முன்னிலைப்படுத்தி சுற்றிச் சுற்றிச் சுழன்றடித்த விஜயகாந்த் குஷ்பு விஷயத்தில் மட்டும் பம்மிப் பதுங்கி சரத்குமாரை அறிக்கை படிக்கச் சொல்லிவிட்டு ஓரங்கட்டிய காட்சியைப் பார்த்தவர்களுக்கு இது தெளிவாகப் புரியும்....)

ஆக
தங்கர்பச்சான் பெரியாரியத்தின் பிரதிநிதியும் கிடையாது.
குஷ்பு பெண்ணியத்தின் பிரதிநிதியும் கிடையாது.

இரண்டும் இருவரிடமிருந்தும் வெவ்வேறானவை.

பள்ளிக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிற மகனிடமோ...
மகளிடமோ...
புத்தகங்களை எடுத்திட்டியா...?
பஸ்பாஸ் பத்திரமா இருக்கா....?
மத்தியான சோத்துக்குக் காசு வெச்சுருக்கியா....?
என்றுதான் கேட்கமுடியும்.

அதை விட்டுவிட்டு
“மறக்காம அந்த ஆணுறை பாக்கெட்டையும் எடுத்துட்டுப் போப்பா.....”
“முடிஞ்ச அளவுக்கு கர்ப்பம் மட்டும் ஆகாமப் பார்த்துக்கோ....”
என்று சொன்னால் அதுகள் நம்மையும் ஒரு சுத்தக் குஷ்புவாகத்தான் பார்க்கும்.

உண்மையில் .............

மொழியைப் பாசிசமாகப் பார்ப்பது.....

ஒழுக்கவாதத்திற்கு எதிரான கலகக் குரல்கள்....

பாலியல் சுதந்திரம்....

பன்முகத்தன்மை....

போன்றவைகளுக்கு
மிகயீல் பூக்கோவையும்....
தெரிதாவையும் ....
இன்ன பிறரையும் கரைத்துக் குடித்த பின் நவீனத்துவவாதிகள் எவரும் தேவையில்லை நமக்கு.

அதற்கு நமது சினிமாக்காரர்களே போதுமானது.



*1957 ஒக்ரோபரில்தான் லைக்கா என்னும் நாய்யை விண்கலத்தில் வைத்து ரஸ்யா விண்வெளிக்கு அனுப்பியது. முதன்முதலில் விண்வெளிக்கு சென்ற உயிரினம் இதுதான். ஆனால் அந்நேரம் மேற்கத்தியப் பிராணிகள் வதைத் தடுப்புச் சங்கத்தினர் இதற்கு எதிராகக் கண்டனம் எழுப்பினர். ஆனால் இன்று வரை ரஸ்யாவே விண்வெளித்துறையில் அனைத்து நாடுகளையும்விட முன்னணியில் நிற்கிறது.*

# மடல்கள்

முதல் இதழைவிட இரண்டாவது இதழ் நாம் பெருமைப்படும்படி உள்ளது.

முதல் முதலாக ஈழத்து வரலாற்று நாவல் லங்காபுரத்தை. கற்பனைப் புனைவாக வாசிக்க மகிழ்வாக உள்ளது. தேவகாந்தன் எமது எழுத்தாளரா?

அகரன் கட்டுரைபோல் தமிழகச் சூழலில் எம்மவர் படும் பாடுகளைக் காட்டும் கட்டுரைகள் வரவேற்கத்தக்கது.

பாலாவின் திரைப்படப் பார்வைகள் பயனுள்ளன. மல்கம் எக்ஸ் பற்றிய கட்டுரையும் குறிப்பிடத்தக்கது.

உதயகலா
சந்திரகுமார்,
ரொரன்ரோ.

உங்கள் புத்தகம் கிழமை இதழ்களை விட மேலானது. அவசரத்துக்கு கீழே விரிக்க முடியாது. எனவே அது எப்போதும் கிழே போவதில்லை.

ராஜ்குமார் ஞானமுத்து

எதையும் இலவசமாகச் செய்தால் அதன் நன்மை விளங்காது. சிந்தித்துப் பாருங்கள்.

முத்துச் செல்வன்

தமிழகத்தில் இருந்து வரும் பல இதழ்களில் பொருள் அடக்கம் குறைவாக இருந்தாலும் அதனை வழங்கும் தன்மையில் பொருள் இருப்பதுபோல் காட்டிவிடுவார்கள். அந்தக் கலையை ஈர்த்துக் கொள்ளுங்கள்.

செல்வகுமார் கிருட்டினன்

பறை இதழைப் படிக்கும் போது ஊரில் படித்ததுபோன்று உணர்வேற்பட்டது. பின்புதான் ஏன் என்று சிந்தித்துப் பார்த்தேன். நாங்கள் ஊரில் பத்திரிகைத்தாளில் அச்சடிக்கப்பட்டவையைத்தானே படித்திருந்தோம். அதுதான் எங்களுக்குப் பழகிய ஒன்று. அட்டை வடிவமைப்பில் கவர்ச்சி காட்டவேண்டும் என்று எண்ணி வழுக்கி விழுந்துவிடாதீர்கள். எழுத்தில் அழகையும், கவர்ச்சியையும் அறிவையும், தொழில் நுட்பத்திறனையும் காட்டுவீர்.

மகேஸ்வரன் காந்திநாதன் ரொரன்ரோ

கியூபா, தாய்லாந்து போன்ற நாடுகளுக்குப் பயணித்து எழுதியதுபோல் ஈழத்தில் ஆதிக்கக் காரர்களால் கொள்ளைபோன சனநாதமங்களம் (பொலநறுவை) போன்ற இடங்களுக்கும் சென்று தமிழர்களின் வரலாற்றுச் சுவடுகள் பற்றி எழுதவேண்டும். சனநாதமங்களம் சோழர் ஆட்சியில் மும்முடிச்சோழமண்டலம் என்று பெயர்பெற்றிருந்தது. இன்றைக்கும் சோழர் ஆண்டமைக்குச் சாட்சியாக வானவன்மாதேவி என்ற கோவில் உள்ளது.

நாயகவல்லி சி

அப்பு மப்பு வாசிப்புக்கு சுவையாக உள்ளது. திரைப்படச் செய்திகளை வேறு மாதிரியாகத் தரலாம். சிறப்பான செய்திகளுள் திரைப்படச் செய்தி தேவையா?

வேலிக்குப் பின்னால் போன்ற கட்டுரைகள் நல்லவை. ஆனால் ஏதாவது ஒரு புள்ளியில் கவனம் குவிக்க வேண்டும்.

சுபன் நாகராசன்

இந்த இதழில் தரப்பட்ட துணுக்குச் செய்திகள் தொகுத்தவர்: அலைமகள் மற்றும் திரு

# தாட்சாயணி கவிதைகள்

## எழுதாக் கவிதை

எனக்கும்
காதல் வரும்

நிர்வாண வெளிச்சத்தில்
நீளும் இரவுகளில்
களவியல்.... கற்பியல்....

கனவின் ஆசை
எனக்கும் வரும்

சிலுசிலுக்கும் இரவுகளில்
சிருங்காரம் செய்து,

ஒரு போது மயங்கி.....
ஒரு போது முயங்கி.....

எனக்கும்
காதல் வரும்.

என்னவர் கையில்
மண் உண்டெனச் சொல்!

அதுவரை
எல்லையில் இருந்தெனை
எழுப்ப முயலாதே.

என் தோட்டம்
பூக்காமல் போகலாம்.
என் கனவு
கனவாகவே போகலாம்.
என் வேட்கை
நிறைவேறாமல் போகலாம்.
என் வானம்
வெளுக்காமல் போகலாம்.
என் திசைகள்
இருண்டே கிடக்கலாம்.

ஆயினும் என்ன?

என் கைகள் நீரூற்றும்.
என் கண்கள் கனவு காணும்.
என் வேட்கை இன்னும் நீளும்.
என் விழிகள் விடிவெள்ளி தேடும்.

திசைகள்
விடியாத பொழுதும்
என் சிறகுகள் விரியும்.

# ஆயுதம்

முனை தெரியும் வாள்
உன் ஆயுதம் ஆகலாம்.
என் இறப்பு
நிச்சயம் எழுதப்படலாம்.

நான் வீழ்ந்தது கண்டு
நீ வெற்றிப் பெருமிதம்
அடையலாம்.

ஆயினும்
பகை நண்பனே
தெரிந்து கொள்.

முனை விரியும்
எழுதுகோல்
என் கையில்!

அது எழுதும்.

இறப்பிலும் வாழ்பவன்
யார் என்று.

... கிழமைக்கு ஒருதடவைதான்
சூரியன் எனக்குத் தெரிகிறான்.
சிலவேளை அதுவுமில்லை.

தாய் மண்ணிலோ,
கோயில் என்ன குளம் என்ன
கும்மாளத்திற்குக்
குறைவென்ன.
கூத்திருக்க பாட்டிருக்க
பார்த்திருக்க ஊர்ச்சனங்கள்.

இழக்கக் கூடாதவையெல்லாம்
இழந்தவனுக்கு
என்ன சொல்லி என்ன?

பள்ளிக்கூடங்களில்,
பனைமரக் காடுகளில்,
களிப்புடன் கழிந்த நம்
பழைய வாழ்வினைத்
தேடித் தேடித் தவிக்கிறேன்.

முகம் தெரிந்தும்
முகவரி தெரியா
நண்பர்களே...

தாய்நிலச் சேற்றில்
நின்று
நீங்கள் நிமிர்கின்றீர்கள்.

பனிப் புலச் சேற்றில்
நான்
இன்னும்
இன்னும் அமிழ்கிறேன்.

இது சிவா தாட்சாயணியின் வரவிருக்கும் பெரும் கவிதையொன்றின் பகுதி...



# பெருமையுடன் வாழ்ந்த "மாயா" பழங்குடி மககள்

# சொந்த மண்ணில் அடிமைகளாக...




கவிஞர் செங்கோன்

1."மாயா" பழங்குடி மக்கள் பற்றி முதன்முதலில் நான் அறிய வந்தது 1988 இல் கனடா வரும் வழியில், நிக்கரகுவா நாட்டிலுள்ள "கிறேனடா" என்ற நானூறு வருடங்களுக்கு மேற் பழமை வாய்ந்த நகரில் நான் தங்கி இருந்த போது ஆகும். புதுதில்லியில் இருந்து மாசுகோ வழியாக நிக்கரகுவா நாட்டின் தலைநகரான மனேகுவா நகருக்கு விமானத்தில் பயணம் செய்து கொண்டிருந்தபோது, எனது பக்கத்து இருக்கையில் அமர்ந்திருந்த நிக்கரகுவா நாட்டவரான பொது உடமைவாதி ஒருவரது நட்பு எனக்குக் கிடைத்தது. Pepe Prego என்ற பெயருள்ள அந்தத் தோழர், நிக்கரகுவாவில் உள்ள "கிறேனடா" நகரைச் (மனேகுவாவில் இருந்து சுமார் 60 கிலோ மீற்றர்) சேர்ந்தவர். சரளமாக ஆங்கிலத்தில் உரையாடக் கூடியவர். இவருடைய உதவியுடன், அவர் ஏற்பாடு செய்த, அவரது நண்பர்களான குடும்பத்தினரின் இல்லத்தில், சுமார் ஒன்றரை மாத காலம் நான் கிறேனடா (Grenada City, Nic.) நகரில் தங்கி இருந்தேன். நான் தங்கி இருந்த வீட்டில் வசித்த எவருக்கும் ஆங்கிலம் புரியாது. எனக்கு என்ன தேவையென்றாலும், நான் Pepe உடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு விடயத்தைச் சொன்னால், அவர் நான் தங்கி இருக்கும் வீட்டாருக்கு அதனை இசுபானிய மொழியில் எடுத்துச் சொன்னபின்தான் நான் கேட்டது கிடைக்கும். இதனால் நான் பெரும்பாலும் ஒரு ஊமை போலவே நாட்களை நகர்த்திக் கொண்டிருக்க வேண்டிய நிலை. ஆனாலும் எனது நற்பேறு நான் தங்கி இருந்த வீட்டில் ஒரு நூல்நிலையம் இருந்தது. நூற்றுக்கணக்கான இசுபானிய மொழி நூல்களுக்கு மத்தியில் சில ஆங்கில நூல்களும் அங்கு இருந்தன. தனது தந்தை, நிக்கரகுவா நாட்டின் தூதராக பல வெளிநாடுகளில் பணியாற்றியவரென்றும், ஆங்கில மொழியில் பாண்டித்தியம் உள்ளவரென்றும், அந்த நூலகத்தில் உள்ள ஆங்கில நூல்களில் பெரும்பாலானவை அவருடைய நூல்களே என்றும் அந்த வீட்டுக்கார அம்மையார் என்னிடம் பெருமையோடு கூறியதுண்டு. (தோழர் Pepeயின் ஊடாக அவரது மொழிபெயர்ப்பு உதவியுடன் தான்).

2. அங்கு நான் படித்த ஆங்கில நூல்களின் மூலம்தான் நான் மாயா இனத்தவர் பற்றி முதன் முதலில் தெரிந்து கொண்டேன். பின்பு சில மாயா இன மக்களை நிக்கரகுவாவிலும், பின் மெக்சிக்கோவிலும் சந்திக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. அதிலிருந்து இன்று வரை மாயா இனத்தவர் வாழ்வு பற்றிய தகவல்கள் எங்கு கிடைத்தாலும் படிக்கும், கேட்கும் ஆர்வம் தொடர்ந் தவாறு உள்ளது.



அச்டெக்குகளின் எல்லை

மாயாக்களின் எல்லை

3. மாயா பழங்குடிகள் தோற்ற அமைப்பில் திராவிடர்களைப் போன்றவர்கள். முற்கால வள்ளுவ சமூகத்தவர் போன்று தமது ஆடைகளைத் தாமே நெய்து கொள்வார்கள். இன்றும் தாமே நெய்த ஆடைகளை அணியும் வழக்கத்தை விடாப்பிடியாகப் பின்பற்றுகின்றனர்.

4. கிறீத்துவுக்கு முன் 1800 ஆம் ஆண்டளவில் மாயா நாகரிகம் தோற்றம் பெற ஆரம்பித்தது. கி.மு. 200 முதல் கி.பி. 1000 வரை அதனது செல்வாக்கு உச்சக் கட்டத்தில் இருந்தது. மெக்ஸிக்கோ என இன்று அழைக்கப்படும் நிலப்பிரதேசத்திலுள்ள "யூகட்டான்" குடாநாடு மாயா பழங்குடிகள் மிகவும் செறிந்து வாழ்ந்த பகுதியாகும். அதற்குத் தெற்கே, இன்று கொண்டூராசு, எல்சல்வடோர், கௌதமாலா, பெலிசு, நிக்கரகுவா என அழைக்கப்படும் மத்திய அமெரிக்கப் பகுதிகளிலும் - குறிப்பாக கௌதமாலாவில் - மாயா பழங்குடியினரின் செல்வச் செழிப்பு ஓங்கிய நகரங்கள் ஆங்காங்கே அமைந்து இருந்தன. 'அச்டெக்' இனத்தவர் போன்று ஒரே அரசனுக்குக் கீழ்ப்பட்ட சக்கராதிபத்திய ஆட்சியின் கீழ் குடிமக்கள் அனைவரையும் ஒருமுகப்படுத்திய ஆட்சிமுறை மாயா பழங்குடியினரிடம்



இருக்கவில்லை. தன்னாதிக்கமுள்ள பல நகரங்களை ஆட்சி புரியும் நகர அரசுகள் (City States) முறையை அவர்கள் பேணினர். பாதுகாப்பான, உயர்ந்த மண்திட்டுக்களை அமைத்து அங்கு தமது குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொண்டு அதனைச் சூழ கவனமாகப் பயிரிடப்பட்ட விளைநிலங்களை ஏற்படுத்திக் கொண்டனர்.

அறிவியலில் மிகவும் முன்னேற்றமடைந்த மக்களாக அவர்கள் இருந்தனர். அவர்கள் தயாரித்த நாட்காட்டி (Calender) இன்றைய நாசா (NASA) விஞ்ஞானிகள் உபயோகிப்பதையும் விட மிகவும் சரியான-தென்று (more accurate) கருதப்படுகின்றது. சூனியம் (zero) என்ற கணிதக் கோட்பாட்டை தாமே தனித்துவமாக மாயா மக்கள் வகுத்துக் கொண்டார்கள். (எனினும் மாயா உட்பட எந்த ஒரு அமெரிக்கப் பழங்குடிகளும் சக்கரத்தின் (wheel) உபயோகத்தை அறிந்திருக்கவில்லை)

5. சுமார் 25,000 ஆண்டுகளுக்கு முன்னர் இடம்பெற்ற வானியல் நிகழ்வு ஒன்று மீண்டும் 21.12.2012 இல் நிகழ இருக்கின்றது என்பதைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே கண்டுபிடித்தனர் மாயா இன விஞ்ஞானிகள்! என்ன காரணத்தாலோ அவர்கள் 21.12.2012 ஆம் நாளை தமது பஞ்சாங்கத்துக்குரிய முடிவு தேதியாக (end - date) குறித்துள்ளனர். இது உலகின் முடிவுக்கான நாளா? தெரியவில்லை. இவ்வாறு கூறும் குறிப்புகள் எதுவும் அவர்களது பதிவேடுகளிலிருந்து பெறப்படவில்லை. ஆனால் 21.12.2012 அன்று நிகழவிருக்கும் சூரியன் சம்பந்தப்பட்ட வானியல் நிகழ்வு 25,000 ஆண்டுகள் முன்னர் கடைசியாக இடம் பெற்றதை இன்றுள்ள வானிலை அறிஞர்கள், உறுதி செய்கின்றனர்.

6. இவர்கள் பல நூல்களை - ஒரு வகைப் புல்லிலிருந்து தயாரித்த காகிதத்தில் எழுதினார்கள். இலக்கியங்களையும் அவ்வாறு படைத்து நூலகங்களை ஏற்படுத்திப் பாதுகாத்தனர். கல்வெட்டுகளிலும் பல தகவல்களைப் பொறித்து வைத்தனர். ஆயினும் நூல்களில் பெரும்பகுதியும் கால ஓட்டத்திலும், போர்களாலும் அழிந்து பட்டன. ஆயினும் கல்வெட்டுகளில் பெரும்பகுதி இன்று கண்டுபிடிக்கப்பட்டு, தொகுக்கப்பட்டு அரிய பல தகவல்கள் சேகரிக்கப் பட்டுள்ளன. கி.பி. 1100இல் மாயா நாகரிகம் சிறப்பிழந்து வீழ்ச்சி அடைய ஆரம்பித்தது. கி.பி 822 அளவில் முக்கிய சில நகரங்கள் கைவிடப்பட்டன. இதற்கு போர், விளைச்சல் இன்மை, நோய் இவற்றில் ஒன்றோ அல்லது அனைத்துமோ காரணமாக இருந்திருக்கக் கூடும் என ஆராய்ச்சியாளர் நம்புகின்றனர். இசுபானியர் வருகை 1520 இல் இடம்பெற்ற சமயம் மாயா இனம் தன் பெருமை இழந்து, நகரங்களைக் கைவிட்டு பரவலாகச் சிதறிய மக்களாகி விட்டனர்.

இசுபானியர் எஞ்சி இருந்த இலக்கியங்களையும் நூல்களையும் நகரங்களையும் அழித்தொழித்தனர். எதிர்த்த மாயா பழங்குடிகளை ஈவிரக்கமின்றிக் கொன்றொழித்தனர்.

**மாயாக்களின் கட்டங்கள்**



அக்கால ஐரோப்பியரை விட அறிவியலில் முன்னேற்றம் கண்ட மக்களாக மாயா இனத்தவர் விளங்கினர். ஆயினும் ஐரோப்பியர் - அதாவது இசுபானியர் - கொண்டு வந்த துப்பாக்கிகளையும், வெடி மருந்துகள், உருக்கு வாட்கள், மற்றும் குதிரைகள் போன்ற யுத்த தளபாடங்களை யும் எதிர்கொள்ளும் திறன் வாய்ந்த சாதனங்கள் மாயா இனத்தவரிடம் இருக்கவில்லை. ஏறிப் போரிடக் குதிரைகளில்லாது தரையில் நின்றபடி தமது வேல்களை ஏந்தித் தோலினால் செய்த கவசம் அணிந்து மாயா இனம் வீரமாகப் போர் புரிந்தும் தோல்வியையே தழுவநேரிட்டது. சில ஆண்டுகளுக்குள்ளாக மாயா மக்கள் தமது சொந்த மண்ணிலேயே அடிமைகளாக்கப்பட்டனர். அவர்களது சமயமும் பண்பாடும் தடை செய்யப்பட்டன. ஒரு நூற்றாண்டு கழிவதற்குள் 90% மாயா மற்றும் பழங்குடி மக்களும் அழித்தொழிக் கப்பட்டனர்.

இருப்பினும் எஞ்சி இருக்கும் மாயா இனத்தவர் (இவர்களே இன்றும் கூட கௌதமாலா நாட்டில் பெரும்பான்மை இனத்தவர்) தமது பண்பாட்டையும், சமயம், மொழி முதலியவற்றையும் காத்து வந்துள்ளனர். இன்றைய கௌதமாலா, அன்றைய தென்னாபிரிக்கா போன்று பெரும்பான்மை மாயா இனத்தவரை அடக்கி ஒடுக்கி ஆளும் சிறுபான்மை இனத்தவரின் அரசாக உள்ளது. 1954 ஆம் ஆண்டில் அமெரிக்க CIA உளவு நிறுவனம் கௌதமாலா நாட்டின் உள்விவகாரங்களில் தலையிட ஆரம்பித்தது. அன்று முதல் 1996 இல் சமாதான ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டது வரை கொடூரமான இனப்படுகொலை மாயா இனத்தவருக்கு எதிராக நடத்தப்பட்டது.

ஒரு இனத்தின் வாழ்வில் நவீன போராயுதங்கள் எத்துணை அவசியம் என்பதை மாயா இனத்தின் தாழ்வு நமக்குத் தெளிவாக்குகின்றது. புலிகளை ஆயுதங்களை ஒப்படைக்குமாறு சொல்வோர் எவராகவிருப்பினும், ஐ. நா சபையாக இருப்பினும் கூட, அவர்கள் தமிழர் வாழ்வைச் சிதைக்க முற்படுவோரே என்பதை மாயா வரலாறு உணர்த்துகிறது.

"தன்னாயுதமும் தன்கைப் பொருளும்
பிறன் கையிற் கொடுக்கும் பேதையும் பதரே!"

ஔவையார்.

**தமிழ்ப்பிச்சை**



றொரன்றோவில் நடைபெறும் நிகழ்வுகளில் இவரைக் காண முடியும். பெயர் புவனேந்திரன். பணம் கேட்டுப் பிச்சை எடுப்பவர் அல்ல. தமிழ் மொழிப் பிச்சை கேட்பவர். புரியவில்லையா? தமிழ் ஊடகங்களிலும் தமிழர் பேச்சிலும் தூய தமிழ் பயன்படுத்தப்படவேண்டும் என்று பிச்சை கேட்கிறார் இவர். றொறன்ரோவில் நடைபெறும் எம்மவர் நிகழ்வுகளில் தனது சொந்தச் செலவில் துண்டறிக்கை அச்சிட்டு வழங்கிவருகின்றார்.

பீர்சா ஏறக்குறைய பாலுறவு மாதிரிதான்



அது நல்லாயிருந்தா
உண்மையிலேயே நல்லாயிருக்கும்

அது கூடாம இருந்தா
இன்னும் மிக நல்லாயிருக்கும்



இது சாதாரண மரபணு



இது கிளின்ரன் மரபணு

யாழ்ப்பாண அரசின் தோற்றமும் மறைவும் 3



நக்கீரன்

யாழ்ப்பாடி தான் பாடல் பாடிப் பரிசாகக் பெற்ற மணற்றிடலுக்கு யாழ்ப்பாணம் எனப் பெயரிட்டான். அவனது ஆட்சிபற்றி யா.வை.மாலை மிகச் சுருக்கமாகவே கூறுகிறது. ”யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் என்று பெயரிட்டு, இவ்விடயத்தில் வந்திருந்து. வடதிசையிற் சில தமிழ்க் குடிகளை அழைப்பித்துக் குடியேற்றி, இவ்விடம் இருந்த சிங்களவர்களையும் அவர்களையும் ஆண்டு, முதியவயதுள்ளவனாய் இருந்து இறந்து போனான்” என மொட்டையாக முடித்துவிடுகிறது. யா.வை.மாலையை இயற்றிய மயில்வாகனப் புலவர் ஒல்லாந்த மன்னன் மேக்கறுான் (கிபி 1739) கேட்டுக் கொண்டதற்கு இசையவே அதனை எழுதியதாக நூலின் சிறப்புப் பாயிரச் செய்யுளில் குறிப்பிடுகிறார். மேன்னறுான் மன்னன் அல்ல ஒல்லாந்த அரசின் நிருவாகி என்ற கருத்தும் நிலவுகிறது. யாழ்ப்பாண வரலாறு பற்றி நாட்டமுள்ளவரும் யாழ்ப்பாணப் பட்டினத்தின் வரி திரட்டுவராக இருந்த Pieter Macare அதிகாரி (கிபி 1706) கேட்டுக் கொண்டதற்கு இசையவே அவர் யா.வை.மாலையை இயற்றினார் என்ற குறிப்பும் உண்டு. மேக்கறுான் யார் என்பது தெரியவில்லை. இருந்தும் மயில்வாகனப் புலவர் காலம் கிபி 18 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி (கிபி 1736) ஆக இருக்கலாம் எனப் பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்கள் ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

யா.வை.மாலையை எழுதுவதற்கு மயில்வாகனப் புலவர் (1) கைலாயமாலை (2) வையா பாடல் (15 ஆம் நூற்றாண்டு) (3) பரராசசேகரன் உலா (4) இராசமுறை என்னும் நூல்களை துணையாகக் கொண்டாரென்பது சிறப்புப்பாயிரச் செய்யுளால் அறியக் கிடக்கிறது. இதில் பரராசசேகரன் உலா மற்றும் இராசமுறை இரண்டும் இன்று கிடைத்தில. கைலாயமாலை நல்லூர் கைலாயநாதர் கோயில் பற்றியும் வையாபாடல் வன்னிக் குடியேற்றம் பற்றியும் எடுத்துக் கூறுகின்றன. மயில்வாகனப் புலவர் தான் கேள்விப்பட்ட போர்த்துக்கேயர் மற்றும் ஒல்லாந்தர் காலத்து வரலாற்றையும் கர்ணபரம்பரைக் கதைகளையும் அய்தீகங்களையும் கலந்து யா.வை.மாலையை எழுதியுள்ளார்.

இதனால் தடுமாற்றம் தரும் கூற்றுக்கள் நூலில் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக முதலாம் சங்கிலி செகராசசேகரனையும் (1519-1561) போர்த்துக்கேயர் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றியபோது இளவரசனின் பாதுகாவலனாக இருந்த இரண்டாம் சங்கிலிகுமாரனையும் (1617-1619) வரலாற்று மலைவுண்டாக இவ்வாசிரியர் எழுதியுள்ளார். யா.வை.மாலையைப் படிக்கும் போது இவற்றை மனங்கொள்தல் வேண்டும். எடுத்துக்காட்டாக யா.வை.மாலை கிரேதாயுகம் (17,28,000 ஆண்டுகள்) திரேதாயுகம் (92,96,000 ஆண்டுகள்) துவாபரயுகம் (8,64,000 ஆண்டுகள்) ஆகிய மூன்று யுகங்களிலும் இலங்கையை இராட்சதர்கள்

## முதல் அரசன் யார்?

(இயக்கர்கள்) அரசாண்டார்கள் என மிகைப்படுத்திக் கூறுகிறது. ஆனால் விஜயன் வருகையை 2,400 ஆண்டு எனச் சரியாகக் குறிப்பிடுகிறது. மயில்வாகனப் புலவரை இன்றைய அளவுகோலின்படி ஒரு வரலாற்று ஆசிரியர் எனக் கருதமுடியாது. இருந்தும் பரராசசேகரன் உலா மற்றும் இராசமுறை ஆகிய இரண்டு நூல்களும் வெளிவராத நிலையில் யாழ்ப்பாண அரசர்கள் பற்றிய பட்டியலைத் தரும் ஒரே



நூலக யா.வை.மாலை சிறந்து விளங்குகிறது. வையாபாடல் இயற்றியவர் செகராசசேகரன் ஆட்சியின் பொழுது அரசவைப் புலவராக இருந்த வையாபுரி என்பவர் ஆவார். இலங்கையை ஆண்டு அரசர்களது வரலாற்றைக் கூறுவதே நூலின் நோக்கம் என 3வது பாடல் தெரிவிக்கிறது. வையா பாடல் இராவணனது ஆட்சி முடிவுற்று விபீடணனுக்கு இராமர் முடிசூட்டுவதோடு தொடங்குகிறது. வையா பாடல் ஓலைச்சுவடி முதன் முறையாக 1921 ஆம் ஆண்டு பதிக்கப்பட்டது.

யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் என்று பெயரிட்டு, இவ்விடயத்தில் வந்திருந்து. வடதிசையிற் சில தமிழ்க் குடிகளை அழைப்பித்துக் குடியேற்றி, இவ்விடம் இருந்த சிங்களவர்களையும்

> **தண்ணீரும் கண்ணீரும்**
>
> வெங்காயத்தை வெட்டி
> தண்ணீரில் போட்ட பின்பு
> வெட்டினால் கண்ணீர் சிந்த
> வேண்டியிருக்காது.

அவர்களையும் ஆண்டு, முதியவயதுள்ளவனாய் இருந்து இறந்து போனான்" என யா.வை.மாலை மொட்டையாக முடித்துவிடுகிறது என்று மேலே கூறப்பட்டது. ஆனால் யாழ்ப்பாணச் சரித்திரம் என்ற நூல் அவனது யாழ்பாடியின் ஆட்சிபற்றி விரிவாகக் கூறுகிறது.

"யாழ்ப்பாணன் அக்குடிகளை மரக்கலங்களிலே ஏற்றிக் கொண்டு தன் மனைவியோடும் மந்திரி பிரதானி சேனையோடும் மீண்டுவந்து நல்லூரிலே வசித்தான். நல்ல நாளிலே யாழ்ப்பாணன் பட்டாபிஷேகமும் பெற்றுத் தனது நாட்டுக்கு யாழ்ப்பாணம் என்னும் பெயரும் வழங்கினான். அவன் தனக்கு மந்திரியாகவந்த சேதிராயனுக்குப் புத்தூரென்று பின்னர் வழங்கப்பட்ட இடத்தைத் திருத்தி அவ்வூரை அவனுக்குக் கொடுத்தான். அது புதிதாக அமைக்கப்பட்ட ஊராதலின் புத்தூரெனப்பட்டது. நிலவளம் நீர்வளஞ்சோதித்து அனேகவிடங்களைக் காடுகெடுத்து நாடாக்கி நெல்விளைவிக்கவுந் தொடங்கினான்.

அதன்பின்னர் தொண்டைமானுடைய மரககலங்களும் வந்தன. உப்பேற்றும் பொருட்டு ஒரு கால்வாயும், மரக்கலங்கள் தங்குதற்கு ஒரு துறையும் அவன் அனுப்பிய சனங்களால் அமைக்கப்பட்டன. அச்சனங்கள் உப்பளத்துக்குச் சமீபத்திலே குடி கொண்டார்கள். அச்சனங்கள் உப்பெல்லாவற்றையுந் திரட்டிக காலந்தோறும் அம்மரக்கலங்களிலேற்றி அனுப்பி வந்தார்கள். அம் மரக்கலங்கள் மீண்டுவரும் போது, நெல், கறிச்சம்பாரம், வஸ்திரம் முதலியன கொண்டுவந்து யாழ்ப்பாணத்திலுள்ள தொண்டைமான் சனங்களுக்குக் கொடுப்பதுமன்றி மற்றைச் சனங்களுக்குங் கொடுத்து பண்டமாற்றி மீளும். தொண்டைமான் ஏவலாளரால் அமைக்கப்பட்ட கால்வாய் தொண்டைமானாறு என இன்றும் வழங்குகிறது. தொண்டைமானது கருமாதிகாரியாகிய வீரப்பராயன் இருந்த இடம் இன்றும் வீரப்பராயன் குறிச்சி எனப்படுகின்றது. தொண்டைமான் கருமமாக வந்த சனங்கள் பெரும்பாலும் தொண்டை நாட்டின் வடபாகத்திலிருந்து வந்தவர்கள். அவர்கள் பாஷை தெலுங்கு. அது பற்றியே யாழ்ப்பாணத்திலே கடவு, பிச்சுவாய்க்கத்தி (பீச்சாக்கத்தி) முதலிய தெலுங்குச் சொற்கள் வழங்குவவாயின. அவர்கள் விஷ்ணுவை வழிபடுவோர். அதுபற்றி வல்லிபுரமென்னுங் குறிச்சியிலே ஒரு விஷ்ணு ஆலயம் உண்டாவதாயிற்று, வல்லியத்தேவன் அதிகாரஞ் செய்தவிடம் வல்லிபுரமெனப்பட்டது. ராயன், தேவன், கிழான், மழவன் என்னும் சிறப்புப் பெயர்கள் அந்நாள் வேளாளர்க்குரியன. தெலுங்கு பாஷையும் தெலுங்குநாடும் வடுகெனப்படும். அது பற்றியே அந்நாட்டிலிருந்திங்கு வந்து குடிகொண்ட வடமரை வடவர் என்று கூறுவர்.

யாழ்ப்பாடி எழுபது வருடம் அரசு செய்து தன் சுற்றமும் குடிகளும் வயிறலைத்திரங்கப் பரகதி அடைந்தான். அவனுக்குப் பின் சேதிராயனும் ஆண்சந்ததியின்றி இறந்தான்.

சேதிராயன் சந்ததியில் வந்த ஒரு கன்னிகையைப் பொன்பற்றியூரிலிருந்து வந்த மழவராயன் என்பவன் மணம் புரிந்திருந்தான். அவன் யாழ்ப்பாணம் அரசின்றிக் கெடுவதைக் கண்டு ஓர் இராசகுமாரனை நாடிக் கொண்டுவருமாறு சோழநாட்டுக்குச் சென்றான். அங்கே சோழன் புத்திரனொருவன் மதுரையிலே கல்வி பயின்று வருகின்றானென்பது கேட்டுச் சோழராசாவினது அனுமதியோடு மதுரைக்குப் போய் பாண்டியனுக்கு விண்ணப்பஞ் செய்தான். பாண்டியன் அக்கோமகனை அழைத்து, மழவராயன் விண்ணப்பத்தைக் கூறி, அவன் மனக்கருத்தை உசாவினான். கோமகன் அதற்கிசைய பாண்டியன் அவனையும் அவன் தேவியையும் வேண்டும் பரிவாரங்களும் சிறுசேனையும், திரவியமுங் கொடுத்து அனுப்பினான் அதற்கிடையில் மழவராயன் தொண்டைநாட்டுக்குப் போய், குடும்பத்தோடு சில பிரபுக்களையும் அவர்களோடு பயிரிடுங் குடிகளையும், காருககம்மியர்களையும் ஏனையசாதிக் குடிகளையும் கொண்டுவருவேனென அவ்ராசகுமாரன் பால் விடைபெற்றுச் சென்று, அநேக குடிகளை மரக்கலங்களிலேற்றியனுப்பி விட்டு மீண்டு திருவாரூரை அடைந்தான். நல்லூரையடைந்த இராசகுமாரன் ஓர் அலங்காரமான பெரிய மாளிகையும் அரணும் மதிலும் அகழியும் சிங்கார வனமும் அமைப்பித்து, மந்திரி பிரதானிகளுக்கு மாளிகைகளும், அந்தணர் வணிகர் வேளாளர்களுக்கு இருக்கையும், வீதிகளும் யானைப்பந்தி குதிரைப்பந்திகளும், யானை குதிரை ஏற்றச் சாரிவீதிகளும் செய்வித்து நல்லூரைச் சிறந்த நகரமாக்கினான்.

ஒரு ஏரி தோண்டுவித்து யமுனையிலழிருந்து அந்தணரைக் கொண்டு காவடிகளில் எடுப்பித்த தீர்த்தத்தை அதில்விட்டு அதற்கு யமுனையேரியெனப் பெயரிட்டான். இது நடந்தது கலி 3000 இல் (கிபி 101) ஆகும்.

நல்ல நாளில் மழவராயன் முடி தூக்கிக் கொடுக்க, கங்காதர அய்யரால் விதிப்படி மகுடமும் சிங்கை ஆரிய சக்கிரவர்த்தி என்னும் பட்டமும் சூட்டப்பட்டரன்.

அக்காலத்தில் அநுராதபுரத்தில் அரசு செய்திருந்த சோழகுல வேந்தனும் அச்சபைக்கு வந்தான்." (யாழ்ப்பாணச் சரித்திரம் பக்கம் 15-18)

இவ்வாறு முடிசூட்டிக் கொண்டவன் சிங்கை ஆரியச் சக்கரவர்த்தி என்று யா.வை.மாலையும் யாழ்ப்பாணச் சரித்திரமும் ஒரு மனதாகச் சொல்கின்றன.

மேலே அனுராதபுரத்தை அரசு செய்ததாகக் குறிப்பிடப்படும் சோழகுல வேந்தன் யார் என்பதை யாழ்ப்பாணச் சரித்திரம் எழுதிய ஆசிரியர் குறிப்பிடவில்லை. ஆரியச் சக்கரவர்த்திகளது ஆட்சி கி.மு

## குளிர்காலச் சிக்கல்

குளிர்காலம் தொடங்கிவிட்டதால் வீட்டை வெப்பமாக்கும் கருவிகள் பலருக்கு சளித் தொந்தரவை அல்லது நெஞ்சத்தடிமல் போன்ற இறுகிய சுவாசத்தைத் தரலாம்.

இதிலிருந்து தப்பிக்க வீட்டில் ஆங்காங்கே பாத்திரங்களில் நீர் வைப்பதும் மண்சாடிகளில் தண்ணீர் வைப்பதும் உதவும்.

முதலாம் நூற்றாண்டில் தொடங்கி இருந்தால் அந்தக் காலம் தொட்டு யாழ்ப்பாண ஆரிய சக்கரவர்த்திகளது முதல் அரசனான விசய கூழங்கைச் சக்கரவர்த்தி (கிபி 1215-1240) வரை ஆண்ட அரசர்கள் யார் யார் என்ற கேள்வி எழுகிறது. எனவே ஆசிரியர் கூறும் காலம் வழுவுடையதாகும்.

அனுராதபுரத்தை தலைநகராகக் கொண்டு 44 ஆண்டுகள் அரசாண்ட சோழ வம்ச எல்லாளனை (கிபி 205-161) மனதில் வைத்து யாழ்ப்பாணச் சரித்திரம் எழுதிய ஆசிரியர் இந்த இடைச் செருக்கலை செய்திருக்கிறார் போல் தெரிகிறது. இவ்வாறான இடைச் செருக்கல்களும், ஓலைச் சுவடியைப் படி எடுக்கும்போது விடப்படும் பிழைகளும் யாழ்ப்பாண இராச்சியம் பற்றிக் கூறும் நூல்களில் பரவலாக இடம்பெற்றுள்ளன.

(வளரும்)



---

# பெறுமதிமிக்க பரிசுகள்

குறுக்கெழுத்துப் போட்டியில் வெல்வோருக்கு பரிசாக பறை ஒப்பம் ஒரு ஆண்டுக்கு வழங்கப்படும்.

# குறுக்கெழுத்துப் போட்டி

## எண்: 3

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | 4 | | டி | | 8 ப |
| | | | | 13 | | | |
| 17 மு | | | | | | | 24 வா |
| 25 | | | | ற் | | | |
| | | | ன் | | 39 | | |
| | | | ல் | | | | 48 |
| 49 | | 51 | | | | | |
| றை | | | | | கா | | 64 |

### மேலிருந்து கீழ்:

1. நதியின் மறைவிடம் (5)
4. உலகின் உயிர்களுக்கு, உணவின் மூலத்தோற்றம்.(5)
8. திசைகளில் ஒன்று(4)
49. தமிழருக்கு மறைகள் இதைத்தான் ஏற்படுத்தியிருக்கின்றன. (2)
51. நல்லோரும் தீயோரும் உள் வைக்கப்படுவார்(2)

### இடமிருந்து வலம்:

1. கரும்பின் அடியில் தோன்றிய பெயர். இனிக்கும்தான்.(6)
13. தமிழில் உள்ள கலைக் களஞ்சியத்தின் முந்தைய வடிவம்.
17. பண்டைய தமிழரின் துறைமுகம் (3) (தமிழகம்)
25. பெரும் ஓடத்தைத் திசைவழிப்படுத்தும் உரிமை கொண்டவன். (8) குழம்பியுள்ளது
49. ஆங்கிலேயருடன் மானத்துடன் போராடிய தமிழ் வீரனின் நடுகல் இங்குதான் உள்ளது.

### வலமிருந்து இடம்:

24.விருப்பத்தின் ஒரு வகை (3)
39. தலைவனை இப்படியும் சொல்லாம்
48. முட்செடியின் பெயரில் அமைந்தது. பெயரில உண்மையில்லை. வடமேற்கில் உள்ள ஊர்(7) (ஈழம்)
64. காயான பழம், மிக உயரத்தில் இருக்கும்(4)

### விதிகள்:

1. 'பறை' இதழுடன், பதிப்பகத்துடன் நெருங்கிய தொடர்புடையோர் அவரது குடும்பத்தினர் நண்பர் தவிர அனைத்துத் தமிழரும் பங்கேற்கலாம்.
2. தொடரும் மாதத்தின் 10 ஆவது திகதிக்கு முன்னர் கிடைக்குமாறு 'பறை' முகவரியிலோ, தொலைப்படியாகவோ சேர்ப்பிக்கவேண்டும்.
3. போட்டியில் பங்கேற்போர் தங்கள் தொடர்பு தொலைபேசி எண்ணைக் குறிப்பிடவேண்டும்.

மேரி கியூறி, நோபல் பரிசு பெற்ற முதலாவது பெண்



ஆவார். இரண்டு தடவைகள் நோபல் பரிசு பெற்ற முதல் நபரும் இவரே. கியூறி 'கதிரியக்கம்' எனும் இரசாயன , பௌதீக நடவடிக்கையைக் கண்டுபிடித்தார். யுரேனியம் தாக்கமுறும் போது இது நடைபெறுவதை அனுபவத்தில் கண்டு கொண்டார். பொலோனியம், ரேடியம் போன்ற உலோகங்கள் இவரால் கண்டு பிடிக்கப்பட்டன. மிகுந்த ஊக்கமும் மதிப்புமுள்ள இரசாயனவியலாளர் இவர். கதிர்த்தாக்கத்தினுடனான இவரின் புத்திசாதுரியமான ஆய்வுகள் இவரின் வாழ்வைப் பறித்துக் கொள்ளக் காரணமாயின. அளவுக்கதிகமான கதிரியக்கத்தினால் இவர் இறக்க நேரிட்டது.

## கியூரி அம்மையார்

# 'பறை' வெளியீட்டு விழாவில்

## திரு அ. பொ. செல்லையா அவர்கள்

வழங்கிய வாழ்த்துரையின் தேர்ந்தெடுக்கப் பெற்ற சில பகுதிகள்..

ஆரிய ஊதுருவலை முழக்கத்தில் முழங்கி வந்த இதழாசிரியர், பகுத்தறிவைப் பறை சாற்றிட "பறை" என்னும் மாதயிதழை வெளியிடுவது பொருத்தமானது.

பறை என்பது முரசு போன்ற தோல் கருவி, போர்ப்பறை, தம்பட்டம் போன்று சற்றுப் பெரிதாக இருக்கும்.

ஆறு மரக்கால் கொண்ட முகத்தல் அளவு பறை, இது பிற்காலத்தில் கொத்தளவாக மாறியது.

பறை சாற்றுதல், ஒரு செய்தியை மக்களுக்கு வெளிப்படுத்துதல், அறிவித்தல் போன்றனவாகும்.

இலங்கையில் பறைதட்டு என்பர். சிறுவர் புழுகுவதையும் பறை தட்டு எனச் சொல்வர்.

பறை வினையாகவும், பெயராகவும் அமைந்துள்ளது.

போர் முரசம், பறை ஒலிக்கப்படுகிறது என்றும் செயலைச் செய்திப் பரப்பலைப் பறை தட்டப்படுகிறது என்றும் சொல்லினர்.

...தமிழரின் அறியாமைக்குக் காரணமான புராண, இதிகாசங்களின் பொய் உரைகளைப் பிரசுரிப்பதில் முழக்கம் வார இதழ், பறை மாத இதழ் முனைந்து நிற்பது பெருமைக்குரியதாகும்.

திருமூலரின் "ஒன்றே குலம் ஒருவனே தேவனும்" என்ற திருமந்திரத்திற்கு மதிப்பளிக்கப்பட்டுள்ளது.

ஆரியர் வருகைக்குப்பின் தமிழ் நாட்டில் வாழ்ந்த பெண்களுக்குச் சுதந்திரம் இல்லாது போயிற்று.

பெண் ஒரு விலைப்பொருளாக மதிக்கப்பட்டதை ஒரு சிறுகதை மூலம் சொல்ல விரும்புகிறேன். அது ஓர் ஆசிரியரின் கதை.

ஆசிரியர் வழமைக்கு அடிமையானவர். திரு பழமை வழி நடப்பவர்.

நம்ம நாட்டு ஆசிரியர் ஒருவர் மலைநாட்டில் வேலை செய்தார். கல்லூரித் தவணை முடிவிற்றான் வீட்டிற்கு வருவார். எட்டுப் பெண்குழந்தைகளுக்குத் தந்தையானார்.

"ஐந்து பெண்களுக்குத் தந்தையானால் அரசனும் ஆண்டியாவான்" இது பெண்களைப் பொருளாக மதித்த நிலைையக் காட்டுகிறது.

ஒன்பதாவது குழந்தைப் பேற்றிற்காக மனைவி மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டிருந்தார். இது ஒரு ஆண் குழந்தையாக இருக்கும் என்று ஆண் ஆதிக்க உணர்வில், குழந்தையைத் தடவிப் பார்த்தார். மகிழ்ச்சி மிகுதியினால், பலருக்கும் கற்கண்டு வாங்கிக் கொடுத்தார்.

ஆயாச மடைந்த தாதி ஆசிரியரை வினாவினார். எட்டும் பெண்பிள்ளை ஒன்பதாவது ஆணாக வந்தது பெரு மகிழ்ச்சியைத் தருகிறது என்றார் ஆசிரியர்.

ஆச்சரியமடைந்த தாதி நீங்கள் தடவிப் பார்த்தது என் கைவிரலை என்றார்.



ஐக்கிய சோவியத் சோசலிசக் குடியரசின் முதலாவது ஆட்சியாளர் விலாடிமிர் இலிச் லெனின் ஆவர். ஒக்ரோபர் புரட்சியின்போது பொல்ஸ்சவிக்கை இடைக்கால ஆட்சி அமைக்க இடம்கொடுத்தார். இந்தப்புரட்சி மேற்கத்தைய நாடுகளில் சோசலிசப் புரட்சியை முன்னெடுக்கும் என சோவியத் தலைவர் நம்பியிருந்தார். ஒக்ரோபர் புரட்சி பிற்காலக் கலண்டரின் படி நவம்பர் 6-7 எனவும் ரஷ்யாவில் முன்னர் பாவனையில் இருந்த யூலியன் கலண்டரின்படி ஒக்ரோபர் என்பதும் குறிப்பிடத்தக்கது.



*1960 ஆவது ஆண்டு ஒரு நாவல் முதல் நாளன்று 2 லட்சம் படிகள் விற்றுத் தீர்ந்தது. டி.எச்.லோறன்சினால் எழுதப்பெற்ற கருத்து மாறுபாடுகளைத் தோற்றுவித்த 'லேடீஸ் சற்றலீஸ் வ்வர்' (சற்றலி அம்மையாரின் காதலன்) 1928 இல் எழுதப்பெற்றிருந்தாலும் 1960 வரை இங்கிலாந்தில் தடைசெய்யப் பட்டிருந்தது. 1928 இல் இத்தாலியிலும், 1929 இல் பிரான்சிலும் இது வெளியிடப்பட்டும் விட்டது.*

பாலியல் தொடர்பான சர்ச்சசைக்குரிய கருத்துக்களைக் கொண்டிருந்தமையால் அது தடைசெய்யப்பட்டது. நீண்ட வழக்கு வாதங்களுக்கு பின்னரே பென்குயின் நிறுவனம் இந்த புத்தகத்தை 1960 நவம்பர் 10 இல் வெளியிட்டது.

பேரிரினால் கணவன் செயலிழந்து போகும் நேரத்தில் ஒரு அம்மையாருக்கு அவர்களது விளையாடடுப் பொருட்கள் பராமரிப்பாளருடன் ஏற்படும் காதலும் அதையொட்டிய விரிவான வர்ணனைகளுமே அதில் இடம் பெற்றன.

இது பின்னர் திரைப்படமாக வந்தும் சக்கை போடு போட்டது. யாழ்ப்பாணத்தில் ஹரன் திரையரங்கில் இது பல நாட்கள் ஓடியதும் அறிந்திருப்பர்.




முதல் நாள் விற்பனையில் நூல்கள் தீர்ந்ததை அறிவிக்க பெங்குயின் வைத்த தட்டி

# விளையாட்டுச் செய்திகள்

## ஆனைக்கும் அடி சறுக்கும்

உலகத்தில் 2ம் தர வரிசையில் கிரிகெட்டில் உள்ள சிறீலங்கா அணி கடந்த இரண்டு வருடங்களாக பல வெற்றிகளைப் பெற்று வந்தது. ஆனால் திடீரென சறுக்க வெளிக்கிட்டுள்ளது. இந்தியாவுடன் ஆன ஒருநாள் சர்வதேசப் போட்டியில் முதல் 4 ஆட்டங்களிலும் சிறீலங்கா அணி தோல்வியை தழுவியுள்ளது. மீதம் இருக்கும் 3 ஆட்டங்களில் எப்படி ஆடப்போகின்றது என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும். தற்போது ஒரு ஆட்டத்தில் இலங்கை வென்றுள்ளது சற்று ஆறுதலாகவுள்ளது.

## சாதனைகளின் சொந்தக்காரர் சச்சின்

16 வயதில் இந்திய துடுப்பாட்ட அணிக்கு தேர்வு செய்யப்பட்டு பாகிஸ்தான் சென்றபோது அனைவரது கவனத்தையும் தன்பால் ஈர்த்தவர் சச்சின். அப்போது சுழல் பந்து வீச்சாளர் அப்துல் காதரின் பந்துகளை நொருக்கிய போது உலகமே சச்சினை திரும்பிப் பார்த்தது.

உலகளாவிய கிரிகெட் போட்டியில் அதிக ஓட்டங்கள் (13,735) அதிக நூறுகள் (38), அதிக ஆட்ட நாயகன் விருது (50), தற்போது விளையாடும் வீரர்களில் அதிக சராசரி (44.59) உள்ளிட்ட பல்வேறு சாதனைகளுக்கு சொந்தக்காரர் தான் சச்சின். அதிகமான ஒருநாள் போட்டிகளில் பங்கேற்ற வீரர் என்ற சாதனையை (தற்போது 349) நெருங்கிக் கொண்டிருக்கும் சச்சின் (வாசிம் அக்ரம் 356 போட்டிகளில் பங்கேற்று முதலிடத்தில் இருக்கின்றார்) மீண்டும் அணிக்கு திரும்பியுள்ளது இந்திய கிரிக்கெட் அணிக்கு புத்துணர்ச்சியே!

## ஜார்க்கண்ட் சிங்கம் - தோனி!



ஜார்ஜ்க்கண்ட் சிங்கம் மகேந்திர சிங் தோனி சிறீலங்காவுடனான 3ஆவது ஆட்டத்தில் சரமாரியாக ஓட்டங்களைக் குவிக்க, வெடி வெடித்து மகிழ்ச்சியாக கொண்டாடினர். 24 வயதான இளங்காளை 145 பந்துகளில் 10 சிக்ஸர்கள், 17 பவுண்டரிகளுடன் 183 ஓட்டங்கள் குவித்து கடைசி-வரை ஆட்டம் இழக்காமல் இருந்தார். ஒரு ஆட்டத்தில் 10 சிக்ஸர்கள் அடித்த ஒரே இந்தியர் என்ற பெருமையும் தோனி பெறுகின்றார்.

## கங்காருவின் குகைக்குள் மோதல்!

அவுஸ்திரேலியாவை அதன் குகைக்குள்ளேயே தொடரில் சந்திக்கின்றது மேற்கு இந்திய தீவுகள் அணி. 3 நீண்ட போட்டிகளில் மோத இருக்கின்றது. அவுஸ்ரேலியர் தொடரை இங்கிலாந்திடம் இழந்தாலும், நட்சத்திர வீரர்களை எதிர்த்து விளையாடி உலக வெற்றியாளர்தான் என்பதை சமீபத்தில் முடிவுற்ற உலக கிரிக்கெட் கிண்ண பெரும் தொடரில் நிரூபித்துள்ளது (கங்காரு) ஆஸி அணியினர். ஒரு காலத்தில் உலகப் புகழ் பெற்ற மேற்கு இந்திய தீவுகள் கடைசியாக ரிச்சி ரிச்சர்ட்சன் தலைமையில் 1992-93இல் அவுஸ்திரேலியாவில் தொடரை வென்றுள்ளது.

## மீண்டும் நடால் - ரெனிஸ்!

ரெனிஸ் ஆடவர் - ஸ்பெயினில் நடாத்த இறுதிப் போட்டியில் இளம் வீரர் ஆன ரேபல் நடால் சம்பியன் பட்டத்தை கைப்பற்றினார். பல முன்னணி வீரர்கள் பங்குகொண்ட இச் சுற்றுப்போட்டியில் நடால் வென்ற சம்பியன் பரிசுத் தொகை 2.1



மில்லியன் யூரோக்களாகும்.

இறுதிப்போட்டியில் இவான் லு பிசியை 2-6 3-6, 6-3, 6-4, 7-6 என்ற செட் கணக்கில் வெற்றி ஈட்டினார்.

## சாண் ஏற முழம் சறுக்கும்!

பல ஸ்ரான்லி கோப்பைகளை கைப்பற்றிய ரொறன்ரோ (Maple Leafs) ஐஸ் கொக்கி அணியினர் கடந்த 40 வருடங்களுக்கு மேலாக Stanley Cup - கோப்பையை வெல்லவில்லை. இம்முறை பெரும் நட்சத்திர வீரர் ஏரிக் லிண்றோஸ்ஜத் தன்னகத்தே கொண்டுள்ளது. "சாண் ஏற முழம் சறுக்கும்" என்பதைப் போல ஏரிக் லிண்றோஸ் அணியில் நன்றாக விளையாடத் தொடங்க அணியின் தலைவர் சண்டின் காயப்பட்டு முதல் ஆட்டத்தில் இருந்தே பல ஆட்டங்களை விளையாடாமல் இருக்கின்றார்.

## சொக்க வைக்கும் சோனியா!

இந்தியாவின் இளம் நட்சத்திர ரெனிஸ் வீராங்கனையான சோனியா அவுஸ்திரேலியாவின் முன்னணி பயிற்சியாளர் ஆன டோனி ரோச்சியிடம் பயிற்சி எடுக்க இருக்கின்றார். அவுஸ்திரேலிய முன்னணி பயிற்சியாளர் ஆன டோனி ரோம் உலக நம்பர் 1 வீரர் ஆன ரோஜர் பெடரர் உள்பட பல உலகப்புகழ் பெற்ற ரெனிஸ் வீரர்களுக்கு பயிற்சி அளித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. 18 வயதான சோனியாவிற்கு இவரது சிறப்புப் பயிற்சி மனோரீதியான ஒரு ஊக்குவிப்பாக இருக்கும். உலக மகளிர் தர வரிசையில் சோனியா 31வது தரத்திற்கு உயர்த்தப்பட்டுள்ளார்.

## "காதில் கடுக்கன் - பந்தில் சிப்" உதைபந்தாட்டம்

உதைபந்தாட்ட விளையாட்டில் காதில் கடுக்கன், பந்தில் கணனிச் சில்லு, செயற்கையான மைதானம் போன்ற புதிய தொழில் நுட்பங்களை உலக உதைபந்தாட்ட கூட்டமைப்பு புகுத்தி வருகின்றது. மைதானத்தில் இருக்கும் வீரர்களுக்கும் பயிற்சியாளர்களுக்கும் தொடர்பை ஏற்படுத்த காதில் கடுக்கன் முறை அறிமுகமாகியுள்ளது. அதாவது வீரர் தனது காதில் இலத்திரனியல் கடுக்கன் அணிந்து கொள்வார். இதன் மூலம் இவரை பயிற்சியாளர் வாக்கிடோக்கி மூலம் தொடர்புகொள்ள முடியும்.

"கணனிச் சில்லு" பந்தில் இருப்பதால் பந்து கோல் எல்லையை தாண்டியதா என்பதை தெளிவாக அறியமுடியும். செயற்கை இழையிலான மைதானங்களில் அதிக அளவு விளையாட்டு வீரர்களுக்கு தற்போது நாட்டம் இல்லை. ஆனால் இந்தப் புதிய நுட்பங்கள் எல்லாம் உண்மையிலேயே கேள்விக் குறிகள் தான்?

## பனால்டி உதை தவறியவருக்கு - தலைக்கு ஆபத்து!

கமருன் நாட்டு உதைபந்தாட்ட வீரரும், தற்போது இத்தாலி நாட்டில் இன்டர்மிலான் கழகத்திற்கு விளையாட வருபவருமான பியர்ரே உமே, தனக்கும் தனது குடும்பத்திற்கும் உயிர் ஆபத்து ஏற்பட்டுள்ளதாக தெரிவித்துள்ளார். உலக கிண்ண தகுதிப் போட்டியில் கமருன் - எகிப்து அணிகள் மோதின. இந்தப் பரபரப்பு ஆன ஆட்டம் 1:1 என்று முடிவுற்றது. இதில் பனால்ட்டி உதைகள் மூலம் கமருன் அணி உலககிண்ணப் போட்டிகளில் பங்கு பெறும் வாய்ப்பை இழந்துள்ளது. பியர்ரே உமே தான் ஒரு பனால்ட்டி உதையை கோட்டை விட்டு விட்டார். இதனால் கமருன் உதைபந்தாட்ட ரசிகர்களினால் பியர்ரேயின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது.

பிரஞ்சு நாவலாசிரியர் ஜோ(ன்) போல் சார்த்தர் தனக்கு கிடைத்த இலக்கியத்துக்கான நோபல் பரிசை வேண்டாம் என்றார். இது நடந்தது *1964* இல்.



'அரசியல். சமூக, இலக்கிய நோக்குகளை உடைய ஒரு எழுத்தாளர் தனது சொந்தக் கருவியின் துணையுடன் போராடவேண்டும். அதாவது எழுத்து என்ற கருவியுடன்' என்பது அவரது கருத்தாக இருந்தது. எனவே தனக்கு நோபல் பரிசின் பலம் தேவையில்லை என்றார்.

ஆனால் இவரை விட இளையவரான, அல்ஜீரியாவில் பிறந்தவரான சார்த்தரைப்போலவே அதே இருத்தலியல் துறை சார்ந்து செயற்பட்ட ஆல்பர்க் காம்யுவுக்கு முதலில் நோபல் பரிசு வழங்கப்பட்டதனால் தனக்கு வேண்டாம் என்று தவிர்த்தார் எனச் சொல்வாரும் உளர்.

நாவலாசிரியர், மெய்யலாளர் மற்றும் சமூகச் செயற்பாட்டாளர் ஆகிய சார்த்தர் சமூகவியல் சிந்தனைகளில் குறிப்பாக இருத்தலியலில் தாக்கம் செலுத்தி முக்கிய ஆளுமையாவார்.

**தமிழிலக்கியச் சிறப்பு: பள்ளு**

படிக்கும்போது பாட்டு நயமும் இனிமையும் வியக்கக் கூடிய சொல்லாட்சிகளும் நிறைந்த இலக்கியங்களுள் முக்கூடற் பள்ளும் குற்றாலக் குறவஞ்சியும் இடம்பெறும். சொல்லவரும் செய்திக் கேற்ற தாளஅமைப்பும் அதற்கேற்ற சொல்நடையும் கொண்டவை. நாட்டார் பாடல்களுக்கு இலக்கிய வடிவம் கொடுத்தமை போன்று செய்திகள் காணப்படும்.

முக்கூடற்பள்ளில் வயலும் அதைச்சுற்றிய வாழ்க்கைக் கதைகளும் கூறப்பட்டிருக்கும். நெல்லின் வகை, மாட்டின் வகை, மழைக்காலம், நாற்று நடுகை, பண்ணையாரின் கெடுபிடி, வேலை செய்பவர்களின் துன்பங்கள் நகைச்சுவைக் காட்சிகளாகப் பாடப்பட்டிருக்கும். துள்ளலோசையுடன் குறவன் குறத்தி நையாண்டியாக குறவஞ்சிப் பாடல்கள் அமைந்திருக்கும். இது திரிகூடராசப்பக் கவிராயரால் இயற்றப்பட்டது.



விவசாயிகளைக் கொண்ட தனது சேனையுடன் மக்களைத்திரட்டி சீனு ஆட்சிக்கெதிராய் எழுந்த மாவோ சே துங் சீனாவில் அதிகாரத்தைக் கைப்பற்றினார். சீனாவின் தெற்கு மலைப்பகுதிகளில் 1928 இல் இது நிகழ்ந்தது. இந்தத் தெற்கு மற்றும் மத்திய பகுதிகளில்தான் பெருமளவு விவசாயிகள் மாவோவுடன் ஒன்றிணைந்தனர்.

1933 இல் தோற்றுப் போன சேனை தப்பித்தல் வேண்டி சீனாவை விட்டு வெளியேற ஒரு நீண்ட நெடும் பணம் மேற்கொள்ளப்பட்டது.

இவர்கள் 11 பெரும் பகுதிகளைக் கடந்து, 28 பெரிய ஆறுகள், 18 பெரிய மலைத்தொடர்களைக் கடந்து இந்தப் பயணத்தை முடித்தார்கள்.

பசியின் இறப்பில் உறுப்பினர்களை விட்டுச் செல்வது சில நாட்களில் அன்றாடம் நடப்பதாக இருந்திருக்கிறது.

6000 மைல் நடந்த இந்த பயணம் உலக வரலாற்றில் மனிதரால் இருபதாம் நூற்றாண்டில் மேற்கொள்ளப் பெற்ற மிகப்பெரும் நெடும் பயணமாக இருக்கிறது. இந்தப் பயணம் 1935 இல் முடிவுற்றது. இதற்கு 368 நாட்கள் எடுத்திருக்கிறது.

## நீண்ட நெடும் பயணம்

மொங்கோலியா
MANCHURIA
Mukden
கொரியா
Peiping
1935 இல்
Pao An
Yenan
Lanchow
Sian
Nanking
Hankow
Chungking
1933 இல்
HUNAN
Canton
Kunming
பர்மா
INDO-CHINA
பசிபிக் கடல்

அவர்கள் நடந்த பாதை

15 ஆவது பக்கத் தொடர்ச்சி

சேமிக்கும் தொகையில் இருந்து, அந்த கடனை நீங்கள் வட்டியுடன் கட்டக் கூடியதாக இருப்பின் அவ்வாறு கடன் வாங்குவது தவறாகாது.

ஓய்வு பெறுவதற்கான பதிவு செய்யப் பட்ட சேமிப்பு திட்டத்தில் சேமிக்கப்ப டும் பணத்துக்கு வரிவிலக்கு உண்டு. இவ்வாறான வரிவிலக்கு கிட்டத்தட்ட அந்த பணத்தின் 30 வீதத்தை வரிப் பணத்திலிருந்து உங்களுக்கு பெற்றுத் தருகிறது. இந்த 30 வீதம் அந்த பணத் திலிருந்து உங்களுக்கு கிடைக்கும் உடனடி வருமானமாகும். ஒவ்வொரு வருடமும் ஏப்பிரல் மாதத்திற்கு முதல் இந்த சேமிப்பில் முதலிட வேண்டும். உங்களிடம் பணம் இல்லாவிட்டால் வங்கியில் 7 முதல் 10 வீதத்துக்கு கடன் வாங்கி நீங்கள் சேமிப்பது சிறப் பானது. 10 வீதத்துக்கு கடன் வாங்கி சேமித்திருந்தால் கூட, மூன்று வருடத்தில் கடனும் வட்டியுமாக திருப்பி செலுத்துவதற்கு சமனான தொகை ஏற்கனவே உங்கள் சேமிப்பு கணக்கில் வந்துவிடும்.

## கடன் அட்டைகள்

கடன் அட்டைகளுடன் கவனமாக இருங்கள். உண்மையில் கடன் அட்டை கள் மிகவும் கவனமாக கடனை கையாளக்கூடியவர்களுக்கு மட்டுமே பொருத்தமானவை. மிகப்பெரும்பா லான மக்கள் இந்த இரகத்தில் சேர மாட்டார்கள். இதனால் கடன் அட்டை தரும் நிறுவனங்கள், மக்களின் முட்டாள்தனமான கடன்வாங்கும் தன்மையால் பெருமளவில் இலாபம் பெறுகின்றன.

கடன் அட்டையில் பணம் பெற்றால், அந்தக்கணமே வட்டி தொகை அறவிடுதலும் ஆரம்பமாகிறது. வட்டி வீதமோ 11 வீதம் முதல் 30 வீதம் வரை இருப்பது சாதாரணம். 0 வீதம் முதல் 6 அல்லது 7 வீதம் வரை அறிமுக வட்டி வீதத்தை 1 மாதம் அல்லது 6 மாதத்துக்கு அறவிடும் கடன் அட்டைகள் உண்டு. அவற்றை நாள், கணக்கு பார்த்து கடனை கையாளத்தெரிந்தவர்கள் மட்டுமே பயன்படுத்த வேண்டும். ஒரு நாள் பிந்தினாலும் உயர்ந்த வட்டிவீதம் செலுத்த வேண்டி வரும்.

கடன் அட்டையில் பொருட்கள் வாங் கும் போது, வாங்கிய பொருளுக்கு பணம் செலுத்துவதை தள்ளிப்போட முடிகிறது. கடன்விபரத்தை கடன் அட்டை நிறுவனம் உங்களுக்கு அறிவித்து 2 முதல் 3 வாரங்களுக்குள் நீங்கள் அந்த பணத்தை முழுமையாக செலுத்தாவிட்டால் உயர்ந்த வட்டி செலுத்த வேண்டி வரும். இவ்வாறாக கடன் விபரங்கள் கணிக்கப்பட்ட நாளின் பின் வாங்கும் பொருளுக்கு, மொத்தமாக கிட்டத்தட்ட 6 வாரங்கள், பணம் செலுத்துவதை நீங்கள் பின் போட முடிகிறது. ஆனால், இவ்வா றாக கடன் அட்டையை பயன்படுத் துவது,. ஒழுங்காக கணக்கு பார்த்து,



கடைசி நாளுக்கு குறைந்தது 3 நாள் முதலாவது மொத்த கடனை கட்டக் கூடியவர்களுக்கே பொருத்தமானது.

பெரும்பாலான கடன் அட்டைகளை பயன்படுத்த ஆண்டுதோறும் கட்டணம் செலுத்த வேண்டும். அது 30 டொலர் களில் இருந்து 100 டொலர்கள் வரை இருக்கும். சில கடன் அட்டைகளுக்கு இந்த கட்டணம் கட்டத்தேவையில்லை. இவற்றுள் சில, உங்களுக்கு பணம் தரும் கடன் அட்டைகள். நீங்கள் 100 டொலர் பெறுமதியான பொருட்களை வாங்கியவுடன் 1 டொலரை உங்கள் கணக்கில் வைக்கும் கடன் அட்டைகள் இவை. ஆண்டு இறுதியில் மொத்த மாக அந்தத் தொகையை நீங்கள் செலுத்த வேண்டிய தொகையிலிருந்து கழித்துவிடும் இந்த கடன்அட்டை.

கடன்அட்டையில் வாங்கும் பொருட்க ளுக்கு உத்தரவாதம் உண்டு. குறிப் பாக விமான பயணச்சீட்டு வாங்கிய பின் இந்த விமானநிறுவனம் காணா மல் போனால், கடன்அட்டை நிறுவனம் பணத்தை திருப்பி தரும். அதே போல, கடன் அட்டையில் வாகனம் வாடகைக்கு எடுத்து ஓடி விபத்து நிகழ்ந்திருந்தால், கடன் அட்டை நிறு வனம் அந்த வாடகை வாகனத்தின் திருத்த செலவு முழுவதையும் ஏற்றுக்கொள்ளும். இவ்வாறான வசதி கள் கடன் அட்டைக்கு கடன் அட்டை வேறுபடும். மேலும் கடன் அட்டை தங்கக் கடன் அட்டையா, அல்லது பிளற்றினம் கடன் அட்டையா அல்லது சாதாரண கடன்அட்டையா என்பதை யும் பொறுத்தது. விபத்தில் இறந்தவர் களுக்கு சில கடன் அட்டைகள் ஆயுள் காப்புறுதியும் வழங்குகின்றன. கடன் அட்டைகள் பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் பயன்படுத்தக்கூடியவை. தானியங்கி இயந்திரங்களான தொலை பேசி போன்றவற்றில், சில நாடுகளில் கடன் அட்டைகளை பயன்படுத்த முடியும். கணணிவலையில் கடன்அட் டையை பயன்படுத்தி எந்த நாட்டிலி ருந்தும் பொருட்களையோ சேவைக ளையோ பெற்றுக்கொள்ள முடியும். உங்கள் கடன் அட்டையின் இலக்கம், பெயர், அட்டை காலாவதியாகும் நாள் ஆகியவற்றை அறிந்த ஒருவர், உங்கள் கடன்அட்டையை பயன்படுத்தி எதையும் கணணிவலை மூலம் அல்லது தொலைபேசி மூலம் வாங்க முடியும். கடனை நீங்கள் செலுத்த வேண்டிவரும்.

நீங்கள் வாங்காத ஒரு பொருள் அல்லது சேவைக்கு, உங்கள் கடன் அட்டையில் பணம் அறவிடப்பட்டிருந் தால், அல்லது அறவிடப்பட்ட தொகை நீங்கள் ஏற்றுக்கொள்ளாத ஒன்றாக இருந்தால், கடன் அட்டை நிறுவனத் துக்கு முறையிடுங்கள். அவர்கள் விசா ரணையை ஆரம்பித்து, ஒரு பத்தி ரத்தில் கையெழுத்திடுமாறு உங்க ளுக்கு அனுப்பி வைப்பர். பின்னர் விசாரணை முடிவில் உங்கள் பணம் உங்களுக்கு திருப்பிக் கிடைக்கும். பெரும்பாலான வணிக நிறுவனங்கள் இந்த விசாரணைக்கு ஒத்துழைப் பதில்லை. இதனால் கடன் அட்டை தரும் நிறுவனங்கள் பணத்தை அவர்க ளுக்கு வழங்காமல் உங்களிடமே திருப்பித் தந்துவிடுவர். பல சந்தர்ப்பங் களில் விசாரணையே நடப்பதில்லை.

## நிகர பெறுமதிக்கு மேலான கடன்

நிகர பெறுதிக்கு மேலாக கடன் வாங்க கூடாது என்பதற்கு ஒரு விதிவிலக்கு உண்டு. அது வயது முதிர்ந்த அல்லது மரணம் நிச்சயமானவர்களுக்கு மட்டுமே பொருந்தும். வங்கிகள் கொடுத்த கடன் அட்டையிலோ, அல்லது ஏற்கனவே ஏற்பாடு செய்யப்பட்ட கடனையோ முற்றாக பெற்றுக் கொண்டு, கடன் தந்த நிறுவனம் கேட்கும் மாதாந்த அதிகுறைவான தொகை (3 வீதம் முதல் 10வீதம் வரை) கட்டிவரலாம். கடன் தந்த நிறுவனம், உங்களை சிறந்த கடன் வாங்கும் தகுதியுள்ளவராக கணித்து வரும். நீங்கள் கடனை வட்டியுடன் தவறாமல் கட்டி வருவதுதான் அதற்கு காரணம். உங்கள் கடன்வாங்கும் தகுதியை அவர்கள் அதிகரிக்க, அதிகரிக்க, நீங்களும் மேலும், மேலும் கடன் வாங்கி, அந்த பணத்தை செலவு செய்யலாம், அல்லது மற்றவர்களுக்கு சொத்துகளை வாங்கி கொடுக்கலாம்.

நீங்கள் இறந்தவுடன், உங்கள் கடனும் உங்களுடனேயே இறந்து விடும். உண்மையில் நீங்கள் இறந்தபிறகு, உங்கள் சொத்துக்களை பாகமிடும் சட்டவல்லுனர் பத்திரிகையில் கடன் தந்தவர்களை சொத்துக்களுக்கு உரிமை கோரும்படி அழைப்பார். கடன்தந்த நிறுவனங்கள் இவற்றை கவனிப்பதில்லை. அப்படி கவனித்து சட்டவல்லுனருடன் தொடர்பு கொண்டாலும், உங்களது பெயரில் சொத்துக்கள் இல்லாவிட்டால் அவர்களால் எதையும் மீளப்பெற முடியாது. ஆகவே, பெருமளவு சொத்துக்களை வங்கிக்கடனில் பெற்று, பிள்ளைகளுக்கு எழுதி வைத்துவிட்டு, நீங்களும் உல்லாசமாக வாழ்ந்து விட்டு மறைந்துபோக, இந்த கடன் அட்டைகளும் வங்கி கடன்களும் வழி அமைத்திருக்கின்றன.

கடன் வாங்குவது தேவையான ஒரு செயற்பாடு. கவனமாக கையாளவேண்டிய ஒரு செயற்பாடும் கூட. உங்கள் நிகர பெறுமதியை இல்லாமல் செய்யும் அளவுக்கு கடன் வாங்காதீர்கள். கடன் வாங்கும் பணத்தை, பணத்துக்கும் வட்டிக்கும், பெறுமதியாக பயன்படுத்துங்கள். கடன் அட்டையின் வசதிகளை பயன்படுத்துங்கள், ஆனால் அதன் உயர்வான வட்டிக்கு பலியாகாதீர்கள். சாவுவரும்போது, ஊர்ப்பணத்தில் உல்லாசத்தை அனுபவித்து, பிள்ளைகளையும் வாழவைத்து விட்டு, ஆகாஎன்று கண்ணை மூடிவிடுங்கள்.

மிகக் குறைவான இரத்த
இழப்புக்களுடனும் உயிர் இழப்புக்களுடனும்
ரஸ்யாவின் புரட்சி நடந்தேறிய நாள் (ஒக்ரோபர் 26
- பழைய ரஸ்ய நாட்காட்டி) நொவம்பர் 7.
லியோன் ட்ராஸ்கியின் செஞ்சேனை
வீரர்கள் கைப்பற்றிய மாளிகையுடன்
ஆயிரக்கணக்கான மக்களின் எழுச்சி
வெற்றி பெற்றது.

# ஆட்பிரட்டி துரையப்பா

1960களின் ஆரம்பங்களில் இருந்து எழுபதுகளின் முடிவுவரை திரு.கரிகாலன் அவர்கள் ஈழத்தின் சிறந்த பேச்சாளராக, முதலில் தமிழரசுக் கட்சியிலும் பின்னர் தமிழர் விடுதலைக் கூட்டணியிலும் செயற்பட்டவர். அவரது பேச்சைக் கேட்பதற்கு இளைஞர் கூட்டம் அலையலையாய் வரும். எனக்கு நல்ல ஞாபகம் இருக்கிறது. அந்தக்காலகட்டத்தில் துரையப்பா யாழ் மேயராக இருந்தார்.

துரையப்பா தன்னுடைய மேயர் பதவியைக் காப்பாற்றிக் கொள்வதற்குத் தனக்கு ஆதரவான கவுன்சிலர்கள் ஆதரவை விலக்கும் போதெல்லாம் புது ஆட்களை வேறு கட்சிகளில் இருந்தோ சுயேட்சையாக வெற்றிபெற்றவர்களில் இருந்தோ தன் பக்கத்துக்கு திருப்பிக்கொள்வார். அதனால் அவருக்கு கரிகாலன் இட்டபெயர் "ஆட்பிரட்டி துரையப்பா". அல்பிரட் துரையப்பா என்பதை ஆட்பிரட்டி துரையப்பா என்று கூட்டங்களிலும் சொல்லுவார்.

மேயர் துரையப்பா யாழ்ப்பாணத்தில் சில முன்னேற்றகரமான பணிகளைச் செய்ததும் உண்மை. அவற்றில் ஒன்று. வீதிகளைத் திருத்துவது, அகலமாக்குவது இப்படியான ஒரு சில நல்ல செயற்பாடுகளிலும் அவர் ஈடுபட்டார்.

அவரைத் தாக்கி மேடைகளில் பேசும்போது நண்பர் கரிகாலன் சொல்லுவார்: "துரையப்பா வீதிகளுக்கு கல்லைப் போட்டார். ஆனால் தமிழினத்தின் தலையிலும் அவர் கல்லைப் போடுவார் என்று நாங்கள் நினைக்கவில்லை. துரையப்பா வீதிகளுக்கு மண்ணைப் போட்டார். ஆனால் அவர் தமிழினத்தின் வாயிலும் மண்ணைப் போடுவார் என்று நாம் கருதவில்லை. துரையப்பா வீதிகளில் தாரை வார்த்தார், ஆனால் அவர் எங்கள் உரிமைகளையும் சிங்களவருக்கு இன்று தாரைவார்த்துவிட்டார்" என்று நகைச்சுவையாகக் குறிப்பிட்டுப் பேசுவார்.

இரசித்தவர் நாகேசு சிவராசசிங்கம்

# இலத்திரனியல் படங்களின் நுண்ணளவு

நீங்கள் எடுக்கும் படங்களில் துல்லியமும் படக்கூறுகளின் தொகையும் (Resolution and Megapixel)நாம் வாங்கும் இலத்திரனியல் பட்ப்பிடிப்புக்கருவியில்(digital camera) அடிப்படையாக பார்க்கப்படவேண்டிய ஒரு விடயத்தைப்பற்றி இந்த இதழில் சற்று அலசி ஆராய்வோம்.

இன்று இலத்திரனியல் தொழில்நுட்பத்தினால் பல விதமான படப்பிடிப்புக்கருவிகள் உருவாக்கப்பட்டு விற்பனைக்கு விடப்படுகின்றன. இவையெல்லாவற்றுக்கும் அடிப்படையான துல்லியம் (Resolution), படக்கூறுகளின் (pixel) எண்ணிக்கை ஆகியவற்றைப்பற்றி நாம் விளங்கிக்கொள்வதால் மட்டுமே எமக்கு எந்த வகையான படப்பிடிப்புக்கருவி தேவைப்படுகின்றது என்பதை தீர்மானிக்கமுடியும்..

## படக்கூறு என்றால் என்ன?

உங்கள் கணனியிலோ அல்லது தொலைக்காட்சியிலோ பார்க்கும் படங்கள் பல புள்ளிகளால் உருவாக்கப்பட்டது. துல்லியம் (Resolution) என்பது இந்தப் புள்ளிகளால் ஆன ஒரு படத்தின் அளவை குறிப்பதாகும்.

3.0 Megapixel F3.5-4.3, 3X optical zoom Carl Zeiss lens, equivalent to 38 - 114 mm

ஒருவர் "இந்த படத்தில் துல்லியம் (Resolution) என்ன?", என்று கேட்டால் அந்தப்படத்தில் எத்தனை புள்ளிகள் அமைந்துள்ளன என்பதே அர்த்தமாகும்.
ஒரு இலத்திரனியல் படப்பிடிப்புக்கருவியில் முதல் அளவுகோல் அது எத்தனை படக்கூறுகளை படம் பிடிக்கக்கூடியது என்பதுதான். உதாரணத்துக்கு மேலே படத்தில் தரப்பட்டுள்ள புகைப்படக்கருவி 30 . இலட்சம் படக்கூறுகளை (3.0 Megapixel) கொண்ட படத்தை உருவாக்க வல்லது.

உங்கள் கணனியில் படம் பார்க்கக்கூடியது 72 PPI (Pixels Per Inch). ஒரு அங்குலத்தில் 72 புள்ளிகள் காட்டப்படும். உதாரணத்துக்கு ஒரு படத்தின் அகலத்தில் உள்ள புள்ளிகளின் என்னிக்கை 720 புள்ளிகள் என்றால் அது உங்கள் கணனியில் 10 அங்குலங்களுக்கு படத்தை விரிவாக்கிக்காட்டும் (10 அங்குலங்கள் X 72 PPI = 720 Pixels).

கணனியில் படத்தின் அகலத்தை உயரத்தால் பெருக்கி படத்தின் வரும் எண்ணிக்கை படத்தின் துல்லியம் (Resolution) என்று குறிக்கப்படும். உதாரணத்துக்கு ஒரு படத்தின் துல்லியம் 720 X 500 என்றால் அது கணனியில் கீழ்கண்டவாறு காட்டப்படும்.

720 / 72 = 10"

500 / 72 = 6.94 "

### உதாரணம்

மேலே குறிப்பிட்ட படத்தின் அளவை உதாரணமாக பயன்படுத்துவோம்.

720 X 500 = 360, 000 Pixels = 360,000/million = 0.36 MP

மெகா என்பது மில்லியனை குறிக்கும். படத்தின் அளவுகளைப் பெருக்கி வருகின்ற படக்கூறுகளின் எண்ணிக்கையினை மில்லியனால் பிரித்தால் வருவதே (Megapixel MP).

கீழே தரப்பட்டுள்ள அகலமும், நீளமும் தான்

| அகலம் X நீளம் | = | மெகாபிக்சல் (MP) |
|---|---|---|
| 4064 x 2704 | = | 11.1 |
| 3088 x 2056 | = | 6.3 |
| 3008 x 1960 | = | 5.3 |
| 2048 x 1536 | = | 3.0 |
| 1600 x 1200 | = | 2.0 |
| 1280 x 960 | = | 1.2 |
| 640 x 480 | = | 0.3 |

இப்போது வருகின்ற கமராக்களில் எடுக்கப்படும் படத்தின் அளவுகள் ஆகும்.

மேலே குறிப்பிட்டு உதாரணத்தை பயன்படுத்தி கீழே தரப்பட்டுள்ள அளவுகளை Megapixel இல் கணித்துப்பாருங்கள்.

நீங்கள் 3.0 Megapixel, படப்பிடிப்புக்கருவி வாங்கினால் அது ஆகக்கூடியது 2048 - 1536 வரை மட்டுமே படத்தை உங்கள் கணனியில் காட்டும்.

### அச்சிடல்

சரி இப்போது உங்கள் படம் கணனியில் எவ்வாறு காட்டப்படுகின்றது என பார்த்தோம். அந்தப் படத்தை அச்சிடும் (Print) போது என்ன நடக்கின்றது என்பதை பார்ப்போம்.

நீங்கள் பார்க்கக்கூடிய அச்சு செய்யப்பட்ட படங்கள் ஆகக்குறைந்தது 300 PPI தான் அச்சு செய்யப்பட்டிருக்கும்.. ஒரு சாதாரண மனிதனின் கண்களால் வடிவாக ஒரு படத்தை பார்க்கவேண்டுமாயின் அது ஒரு அங்குலத்தில் (ஆகக் குறைந்தது) 300

புள்ளிகளை அச்சு செய்திருந்தால் மட்டுமே சாத்தியமாகும்.





இளவரசன் சுப்பிரமணியம்
(ராஜ்குமார் சுப்பிரமணியம்)

உதாரணமாக 3 Megapixel எடுக்கப்பட்ட படத்தை மனிதரின் கண்களுக்கு வடிவாக தெரியுமாறு அச்சு செய்திருந்தால்

ஒரு 3 Megapixel எடுக்கப்பட்ட படம் 6.82 X 5.12 அளவிலே அச்செடுக்கப் படலாம். நாங்கள் 200 PPI இல் அச்செடுப்போயின் படத்தில் அளவு பெரிதாக மாறும் ஆனால் அச்செடுக்கப்படுகின்ற போது அது கண்களுக்கு அழகின்றி தெரியும்.

2048 x 1536 = 3.0 MP
2048 படக்கூறுகள் / 300 PPI = 6.82 அங்குலம்
1536 படக்கூறுகள் / 300 PPI = 5.12 அங்குலம்

உங்கள் கணித அறிவினை பயன்படுத்தி இந்த அட்டவணையில் தரப்பட்டுள்ள படத்தின் அளவுகளை கணணியிலும், அச்சிலும் பார்க்கக்கூடிய அளவுகளுக்கு மாற்றிப்பாருங்கள். (இதில் தரப்பட்டுள்ள அளவுகள் மட்டும் தட்டப்பட்டுள்ளன)

Common Image Sizes and Print Sizes at 300 dpi

| Image Size | Megapixels | Native Print Size (in inches) |
|---|---|---|
| 4064 x 2704 | 11.1 | 13.5 x 9 |
| 3088 x 2056 | 6.3 | 10.25 x 6.8 |
| 3008 x 1960 | 5.3 | 10 x 6.5 |
| 2048 x 1536 | 3.0 | 6.8 x 5.1 |
| 1600 x 1200 | 2.0 | 5.3 x 4** |
| 1280 x 960 | 1.2 | 4.25 x 3.2 |
| 640 x 480 | 0.3 | 2.1 x 1.6 |



எதற்காக படப்பிடிப்புக்கருவி தேவைப்படுகின்றது என்பதின் காரணத்தை அறிந்த கொண்ட பிற்பாடு, அதற்கு எத்தனை படக்கூறுகளுடைய படப்பிடிப்புக்கருவி தேவைப்படுகின்றதோ அதற்கு ஏற்றவாறு தெரிவுசெய்யலாம்.

ஒரு படப்பிடிப்புக்கருவி வாங்கவேண்டுமாயின் அதற்கு பல இதர விடயங்களையும் நீங்கள் ஆராய்ந்து பார்க்குமுன்னால் படக்கூறுகளைப் பற்றி அறிந்திருப்பது அவசியம்.



புகைப்படம்: லியோ



# படித்தவை பார்த்தவை

ப.ஸ்ரீஸ்கந்தன்

## தெரிதல்

கைக்கடக்கமான எட்டுப்பக்கங்களைக் கொண்ட தெரிதல் என்ற இதழ் யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவருகின்றது. நின்றுபோன 'அலை' சஞ்சிகையின் ஆசிரியரும், கவிஞரும், எழுத்தாளரும், சர்வதேச திரைப்பட ஆசிரியருமான அ யோகராசா அவர்களை ஆசிரியராகக் கொண்டு தெரிதல் வட்டத்தினரால் வெளியிடப்படுகின்றது.

செய்திகள், ஆசிரியர் தலையங்கம், தகவற்களம்,



கட்டுரைகள், கவிதைகள், படிப்பகம் என்ற நூலறிமுகம் என்று சகல விடயங்களையும் தாங்கி வருகிறது. சிறிய சிறிய விஷயங்களாக இருந்தாலும் அவை கனதியாக இருக்கின்றன.

அலை இதழில் வெளிவந்த 'பதிவு' போல ஊடாட்டம் என்ற பகுதியில் இலக்கிய விடயங்களும், இலக்கியச் சில்லறைத்தனங்கள் பற்றிய சினமும் பதிவாகியுள்ளன. இரசிக்கத்தக்க பகுதி.

மேலதிக தொடர்புகளுக்கு:



அ யோகராசா,
இல. 1:
ஓடக்கரை வீதி,
குருநகர்,
யாழ்ப்பாணம்

## நிலப்பூக்கள்

புதிய பாரதி என்ற புனைபெயரில் தீவகம் வே இராஜலிங்கம் அவர்களது கவிதை நூல். இங்குள்ள பெரும்பாலான பத்திரிகைக்காரர்போல் அல்லாது ஆதியில் இருந்தே எமது விடுதலை இயக்கத்தை ஆதரித்து வருபவர் என்பதாலும், நம்நாடு பத்திரிகையில் இவர் எழுதுகின்ற ஆசிரியர் தலையங்கமான 'நினைந்து நெஞ்சம்' பகுதியை அவரது கவித்துவமான நடைக்காக விரும்பிப் படிப்பவன் என்பதாலும் மனம் நிலப்பூக்கள் நூலைப் படிக்கத் தூண்டியது.

பெரும்பாலான இவரது கவிதைகள் மரபு பற்றி உள்ளன. ஆயினும் வீச்சாக இருக்கின்றன. என்னை எனக்கறிவித்த என் தமிழ்க் கலாதீபம், புதுவைக்கு ஒரு பதில் என்பன சிறப்பான கவிதைகள்.

தமிழ் அழிந்துவிடவல்ல மொழி என்று அறிவிப்பு விடுவிக்கப்பட்ட இக்கால கட்டத்தில் "வீட்டிலே தமிழ் பேசு" என்ற அவரது சிந்தனைக்குப் பாராட்டுக்கள்.

## விடுதலைப் பேரொளி

தாம் தாம் வாழ்ந்த காலங்களில், தமைச் சூழ நடப்பனவற்றைப் பதிவுகளாக்கும் முயற்சியில், சமூகத்தின் ஒரு பிரிவாக இயங்கிக் கொண்டு, சமூகத்தின் இயங்கியியலையே மாற்றும் சக்தி மிக்க படைப்பாளிகள், ஈழப்போராட்டத்தினை ஆவணப்படுத்துதல் என்ற கடமையில் சரிவரச் செயற்படுகின்றார்களா என்ற வினாவை முன் வைப்போமானால் ஏமாற்றங்களே மிஞ்சுகின்றன.

தற்போதைய சூழலில் தம்மை ஈழத்து இலக்கியலாளர் என்று முதன்மைப்படுத்துவோர் "கருத்து" - "மாற்று" என்றை நிலைகளில் தாமும் குழம்பி, மற்றவரையும் குழப்பி வருகின்றனர். அதேவேளை விடுதலை விரும்பிகளும் ஆவணப்படுத்துதல் என்ற அளவில், செயற்பாடு குன்றிய நிலையிலேயே நிற்கின்றனர்.

வரலாற்றில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் காலமானது, இனி வரப்போகும் காலங்களையும் தமிழரின் வரலாற்றின் போக்கையும் மாற்றியமைக்கக் கூடிய கருக்களைச் சுமந்து கொண்டிருக்கும் காலமாகும். அத்தகைய காலத்தைப் பதிவு செய்தலும் ஆவணப் படுத்துதலும் விடுதலைக்கும் ஒப்பானதாகும்.

வரலாற்றை மக்கள் அல்லாது தனியொருவர் தீர்மானிப்பதில்லை. அந்த மக்களை அணி திரட்டி, ஓரணியில், ஓர் குடையின் கீழ் எழச் செய்து வரலாற்றை வென்றெடுப்பவனே வரலாற்றில் தலைவன் என்றும் வரலாற்றுத் தலைவன் என்றும் குறிக்கப்படுவான். அந்த வகையில், போராட்டத்தின் முதன்மைச் சக்தியாக, தமிழர் வரலாற்றின் போக்குத் திசையினைத் தீர்மானிப்பவராக, இந்த நூற்றாண்டின் "இமாலய வியப்பாகிய" ஈழ விடுதலைப் போராட்டத் தலைவர் வே. பிரபாகரன் பற்றி இதுவரை ஆங்காங்கே எழுதப்பட்டவைகள், புதிதாக எழுதப் பட்டவைகள், சிறுசிறு தகவல்கள், தரவுகள், ஒளிப்படங்கள் என முறையான தொகுப்பு ஆவண நூலாக "விடுதலைப் பேரொளி" என்ற தலைப்போடு வந்துள்ளது.




சிவா தாட்சாயணி

போராளிகள், தளபதிகள், பேராசிரியர்கள், அரசியலாளர், இறையியலாளர், கவிஞர்கள், ஊடகவியலாளர் என 78 பேர்களின் பார்வைகள் கட்டுரைகளாகவும் கவிதைகளாகவும் அமைந்துள்ளன. 13 கட்டுரைகள் ஆங்கிலத்திலும்




தரப்பட்டுள்ளன. அதே வேளையில் தந்தை, சகோதரன், ஆசிரியர், மாணவன் என்று ஆரம்பநிலை நிகழ்வுகளும் தரவுகளாக்கப்பட்டுள்ளன. நூலின் கட்டமைப்பே நூலின் கனதியைக் கூறி நிற்கின்றது. நூலின் வடிவமைப்பில் சிறந்த உத்திகள் கடைப்பிடிக்கப் பட்டிருக்கின்றன. சிறிய சிறிய செய்திகள் கூட, அவற்றின் முக்கியத்துவம் கருதித் தகவல்களாக கட்டங்களுக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆங்கிலக் கட்டுரைகளுக்குத் தமிழ் மொழி பெயர்ப்புகள் கொடுக்கப்பட்டிருப்பது பாராட்டத்தக்கன.

போராட்டத்தை முன்னெடுத்துச் செல்கின்ற தலைமைப் பயணியைப் பற்றிய பதிவு முறையான ஆவணமாக வெளிவர ஏறத்தாள 25 ஆண்டுகள் எடுத்துள்ள நிலையில், பின்தொடர்பவர்களைப் பற்றிய பதிவுகள் அச்சு வாகனம் ஏறுவதற்கு இன்னும் எத்தனை காலம் இருக்கின்றது என்ற வினா கண்டிப்பாக எல்லோர் மனங்களிலும் எழவேண்டும்.

சுட்டிக்காட்டபட வேண்டியவைகளாக நான் கருதுவது:

தாய்வழிச் சமூகம் என்று சொல்லிக் கொள்ளும் நாங்கள், தலைவரின் தாயிடமிருந்து, பிள்ளையைப் பற்றிய ஒரு செய்தியைத் தானும் பெறவில்லை. இனத்தின் தலைமை என்று உயரிய இடத்தை அடைந்து நிற்கும் பிள்ளையைச் "சான்றோன் எனக் கேட்ட" தாயின் பெற்ற வயிறு எவ்வாறு இருக்கும்?

உடன்பிறந்த சகோதரிகள் தங்கள் தம்பியின் சிறுபராயத்துச் செயல்களை அதிகம் அறிந்தவராயிருப்பர். அவர்களின் கருத்து?

இந்திய அமைதிப் படையின் தலைமைத் தளபதிகள் தலைவரைப் பற்றிக் கூறிய கூற்றுகள் பல இடம்பெற்றுள்ள வேளையில், சிங்களத்தின் தலைவர்களாகவும், படைத் தலைவர்களாகவும் இருந்தவர்கள் காலத்துக்குக் காலம் தம்மை மறந்து சிலாகித்துக் கூறிய உண்மைகள்?

ஈழம் என்ற கருவைச் சுமந்து கொண்டிருக்கும் தாய்த் தலைமைக்கு பெருமை சேர்க்கும் படைப்பாக இந்நூல் எம் விழுதுகளாலும் நினைவு கொள்ளப்படும் என்பது உறுதி.

வெளியீடு: ஈழமுரசு, ஐரோப்பா
பதிப்பு: 2004 கார்த்திகை

## க. இராசநாதன் கவிதைகள்

இது புத்தகம் பற்றிய குறிப்பல்ல. ஆனால் புத்தகமாகப் போடுவதற்கு சகல தகுதிகளுள்ள பல கவிதைகளை யாத்து வருபவர் க.இராசநாதன் அவர்கள். மிகவும் தன்னடக்கத்துடன் ஆனால் பெரும் விரிந்த கவிப்பரப்பில் வாசம் செய்பவர். இவரை நான் மேடைகளில் பார்த்தது இல்லை. மாலைகள் மரியாதைகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டவர். ஆதலால் தான் இவரை யாரும் கண்டு கொள்வதாகத் தெரியவில்லை. கண்டவர்கள் எல்லாம் புத்தகங்களாக வெளியீட்டு விழாக்கள் நடாத்துகிற இம் மண்ணில் இவரைப் போன்ற சீரிய கவிஞருடைய கவிதைகள் நூலாக்கம்பெற்று வெளிவர வேண்டியது இலக்கியத் தேவையாக உள்ளது.

அண்மையில் முழக்கம் பத்திரிகையில் வெளிவந்த மானுடம் பற்றிய கவிதையைக் கீழே தருகிறேன்.

**ப.ஸ்ரீஸ்கந்தன்**

அண்ட வெளிச்
சாலையில் ஒரு அற்புத
மேடை.

இயற்கைத் தூரிகையின்
பிறவி வண்ணம் தீட்டப்
பெற்ற
உயிர்த் தூசிகளின்
உல்லாச விடுதி.
நேற்றைகளின்
மர்மத்திலும்
நாளைகளின் ஏக்கத்திலும்
மூச்சுத் திணறிக்கிடக்கும்
இன்றைகளின்
இன்பக் கோட்டை.

ஐம்பூதக் கம்பங்களுக்குள்
வாழ்வு தீர்ப்பு சுமத்தப்பட்ட
அப்பாவியச் சீவன்களின்
ஆனந்தக் கொட்டகை.

எங்கும் இருப்போனுக்காய்
எங்கும் இறப்போர்
பொருதும்
எங்கும் இல்லாதவனின்
இல்லாமைக் கல்லறை.

நிலக் கோள் பிளவின்
கருங்கல் ஈட்டிகளின் கூர்மப்
பரப்பினில்

சமுத்திரப் புரள்வின்
பேரலை நெருப்பின் சா நீறு
பூத்த
கனற் பாறை வெளியினில்

தீக்குழம்புப் பேராறுகளின்
எரிமலை அலைகளின்
ஊற்று வாயின் வாயிற்
கதவுகளில்

மானிடப் பச்சையத்தின்
பசி வெறி முடிக்கப் பிளிறும்
சூறாவளி யானைகளின்
எமப் பாத இடுக்கிற்குள்

மானிடா!
வாழ்வின்
மேய்ச்சலுக்காய் பிறவிப் படலை
அவிழ்த்துக் கலைக்கப் பெற்ற
ஒரு கால் நடைத்
துவள்களின் துவளின்
துவள் நீ

அறிவின் மானிடனே!
இந்தப் பூமிமட்டுல்ல
உன் இருப்பும் ஒரு பந்துதான்.
கால்பந்து.
காற்றிருக்கும் போதே
கைப்பற்று கேடயத்தை
அன்பின் கேடயத்தை!

ஏனெனில்
வாழ்வு அம்மட்டே!

# இவ்வளவு தான் உலகம்
# இவ்வளவுதான்....

# வாழ்வும் வடுவும்

## இலங்கையன் செல்வரத்தினம்

தேன்மொழி

வாழ்வும் வடுவும் என்ற நூல் இலங்கையன் என்று அனைவராலும் அன்பாக அழைக்கப்படும் திரு.இ.வே செல்வரத்தினம் அவர்களால் எழுதப்பட்டது. தனது வாழ்வியல் அனுபவங்களைத் தானே அலசிப் பார்த்திருக்கிறார் இலங்கையன் அவர்கள். ஒருவர் வாழ்வதற்குப் பலபேர் வழிகாட்டிகளாக இருப்பதென்பது சாதாரண விடயம். ஆனால் வாழவிடாது தடுப்பதற்கு பலபேர் குழுக்களாக இயங்குவது என்பது ஏற்றுக்கொள்ள முடியாததும் கவலைக்குரியதும் கண்டிக்கத்தக்கதுமாகும். அந்த வகையில் சிறுபான்மை மக்கள் என்று பெயர் சூட்டப்பட்டவர்கள் மீது பெரும்பான்மையினராகத் தம்மைக் கருதிக்கொண்டவர்கள் கட்டவிழ்த்து விட்ட அடக்குமுறைகளும் வன்முறைகளும் என்றுமே ஏற்றுக்கொள்ளப்பட முடியாதவை. இவற்றை நினைத்துப் பார்த்து எங்களையும் கவலைப்பட வைத்திருக்கிறார்.

20ஆம் நூற்றாண்டுகளின் நடுப்பகுதியில் யாழ்ப்பாணம் அந்நியர் தளையிலிருந்து விடுபட்டாலும் அடக்கியாளும் ஆழ்மன விருப்பங்களை விட்டுவிடவில்லை. விளைவு ஒரே சமூகத்தில் வாழும் அடிமட்டத் தொழில் புரியும் மக்களை சாதி குறைந்தவர்கள் என்ற முறையிலும், நிலம் மற்றும் உடைமைகள் அற்ற ஏழைகள் என்ற முறையிலும் அடக்கியாள முயன்றனர். இவற்றினூடாக சமூக ஏற்றத்தாழ்வை நிலை நிறுத்த முற்பட்டனர். அடிமட்ட நிலையிலுள்ள மக்கள் என்று கருதப்பட்டவர்கள் முயன்று பாடுபட்டு வெளிவர வெகுவாகப் பாடுபட வேண்டியிருந்தது. இதுவே இலங்கையன் போன்றோரின் நிலைமை.

இலங்கையன் போன்ற ஒரு சிலர், தங்களாலான முயற்சிகளை எடுத்து, இத்தகைய தடைகளிலிருந்து வெளிவந்த தாம் பட்ட கஸ்டங்களை ஆனால் பெரும்பான்மையான மக்கள் அடிப்படையான எழுத்தறிவுத் தேவை கூடக் கிடைக்கப்பெறாது நாம் இப்படித்தான் வாழப் பிறந்தவர்கள். அது எங்களுடைய தலைவிதி என்று தம்மைத் தாமே சமாதானப் படுத்தி, துன்பத்தில் உழன்று, மரித்துப் போனவர்கள் ஏராளம். மறுபுறத்தில் நாம் பிறந்தது மற்றவர்களை அடக்கியாளுவதற்கே. எமது குடும்பம் அப்படிப் பலபேரை அடக்கியாண்ட குடும்பம் என்று பழம்பெருமை பேசுவதிலும் இவ்வாறு மற்றவர் துன்பத்தில் நாம் பங்கு கொண்டோமே என்ற துளிகூட மனவருத்தம் இல்லாமல் வாழுபவர்களுக்கும் இந்நூல் ஒரு பாடமாக அமையட்டும்.

தனது வாழ்வியலின் அவலங்களை எழுதிய அதேவேளை வேண்டிய காலங்களில் அவ்வப்போது நன்மை செய்தவர்களை நன்றி கூறும் வகையில் பாராட்டத்தவறவில்லை. எங்களின் மக்கள் எங்களை மதிக்காது ஏற்றத்தாழ்வு பாராட்டியபோது, அயல்நாட்டார், அந்நியர் எங்கள் மீது, எங்கள் திறமை மீது மதிப்பும் நம்பிக்கையும்கொண்டு துன்பத்தில் தோள் கொடுத்துத் தூக்கிவிட்டவரை மறக்காது நினைவு கூர்ந்திருக்கிறார்.

தமிழ்மண்ணை நேசிக்கும் ஒவ்வொருவராலும் வாசிக்கப்பட வேண்டிய நூலாகும். தேசிய வாதத்தை வலியுறுத்திப் போராடும் இந்நேரத்தில் சமூக அழுக்குகளை களைவதற்கும் இந்நூல் பெரிதும் துணை புரியும் என்று நம்புகின்றேன்.

---

டிசம்பர் மாதத்தில் பல வீடுகள் தீ தொடர்பான விபத்துக்களைச் சந்திக்கின்றன.
அதற்கு மத நோக்கில்லாதுகூட அனைவரும் கிறிஸ்துமஸ் மரம் வைத்து அதைக் கவனிக்காமல் விடுவதே காரணம்.
உங்கள் குழந்தைகள் வேண்டுகோளுக்காக முதன் முதலாக வீட்டில் கிறிஸ்துமஸ் மரம் வைக்க முயற்சி செய்தால், முதலில் வைத்தவர்களிடம் கருத்துக்களைக் கேளுங்கள்.
குறிப்பாக மேற்கத்திய நாடுகளின் செயற்கை மரங்கள் எளிதில் தீப்பிடிப்பவை.
வீட்டைவிட்டு வெளியே போகும்போது அனைத்து மின்விளக்குகளையும் அணைத்துவிடவேண்டும்.

---

## சிரித்து வாழ வேண்டும்

ப.ஸ்ரீஸ்கந்தன்



நாகேஷின் வாழ்க்கை அனுபவங்கள்
1975ஆம் ஆண்டு கொழும்பு லயனவென்ற் தியேட்டர் மண்டபத்தில் நாகேஷ் அவர்கள் இருமணி நேர உரையாற்றினார். அவரது வாழ்க்கை அனுபவங்களை ஒரு தத்துவவாதிபோல் தத்துவங்களையும் இணைத்துக்கொண்டு மிகவும் சிறப்பாக பேசினார். படங்களில் நகைச்சுவை நடிகராக வரும் நாகேஷா இவர் என்று எண்ணத் தோன்றியது. இவர் பேசி முடிந்தபோது இன்னமும் பேசியிருக்கலாம் என்று எண்ண வைத்தது.

அதை மனதில் நினைத்துக் கொண்டுதான் இந்தப் புத்தகத்தை வாங்கினேன். ஆனால் இப்புத்தகத்தை நாகேஷ் எழுதாமல் இன்னொருவர் தொகுத்து எழுதியிருப்பதால் சிறப்பாக அமையவில்லை.

ஆயினும் அடுத்தடுத்து மூன்று தடவை அம்மை நோய் தாக்கிய சிறுவன் சினிமாவில் சேர்ந்து எவ்வாறு பெரும் சிரிப்பு நடிகனாகினான் என்பதையும் நீர்க்குமுழி, யாருக்கா அழுதான் போன்ற படங்களில் காத்திரமான பாத்திரமாக மாறினான் என்பதையும் அறிய இதனை ஒருமுறை வாசிக்கலாம்.

## Che - A memoir by Fidel Castro

கியூபாப் புரட்சியில் பெரும் பங்காற்றிய புரட்சியாளர் ஏர்னெஸ்றோ சேகுவரா. இவர் அர்ஜென்டினா நாட்டில் பிறந்தவராயினும் 1955ஆம் ஆண்டு முதல் கியூபாப் புரட்சியில் தன்னை இணைத்துக் கொண்டவர். 1959ஆம் ஆண்டு கியூபாப் புரட்சி வெற்றிபெற்றபோது, புரட்சி அரசின் தலைமைப்பொறுப்பை ஏற்குமாறு மக்கள் ஆணை கிடைத்தும், அதை ஒதுக்கிவிட்டு 1965ஆம் ஆண்டு முதல் பிற நாடுகளின் விடுதலைக்காகத் தன்னை அர்ப்பணிப்பதாக முடிவெடுத்து தனது வாழ்வையே போராட்டமாக்கியவர் சேகுவரா. இவர் 1967ஆம் ஆண்டு அக்டோபர் 08ஆம் நாள், அமெரிக்கப் பயிற்சிபெற்ற பொலிவிய நாட்டுத் துருப்புக்களால் கொல்லப்பட்டார் என்று கூறப்பட்டாலும், அக்டோபர் 08ஆம் நாள் கைதுசெய்யப்பட்டு, ஏற்கனவே விழுப்புண் பட்டிருந்த இவர், மிகுந்த சித்திரவதைக்குப் பின்னர் மறுநாளே உண்மையில் கொல்லப்பட்டார் என்ற வரலாற்றை உலகுக்குத் தெரியவைக்கும் நூலே 'Che - A memoir by Fidel Castro' இந்நூலில் சேகுவரா குறித்த தனது குறிப்புக்களுடன், அவருடன் பழகிய நாட்களையும், புரட்சியின்போதைய சம்பவங்களையும் நினைவு கூர்ந்துள்ளார் பிடல் காஸ்றோ.

முக்கியமாக 1965ஆம் ஆண்டு பொலிவியா நாட்டின் விடுதலைக்காக சேகுவரா அவர்கள் தன்னை அர்ப்பணிப்பதென்று முடிவெடுத்தவுடன் இரகசியமாகவே கியூபாவைவிட்டு வெளியேறுவது என்று முடிவெடுத்தார். அவரது பாதுகாப்புக்கருதி இச் செய்தி வெளியுலகுக்குத் தெரியப் படுத்தப்படவில்லை.

ஃபிடல் காஸ்றோ உள்ளிட்ட மிகச்சிலருக்கே அவரது இருப்பிடம், அசைவுகள் குறித்த தரவுகள் தெரியும். அவர் எங்கே என்று அறிவதிலும், அவரைக் கொல்வதிலும் முனைப்புக் காட்டிய அமெரிக்க ஏகாதிபத்தியம், அந்நேரம் திட்டமிட்ட முறையில் பல வதந்திகளை உலவவிட்டது. சேகுவராவுக்கும் - காஸ்றோவுக்கும் உட்பூசல், சே - டொமினிக்கன் றிப்பப்ளிக் நாட்டில் கொலை - இப்படி பல வேடிக்கையான வதந்திகள் அமெரிக்க ஏகாதிபத்தியத்தால் பரப்பப்பட்டன. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் அன்றைய இயலாத்தன்மை இந்த வதந்திகள் மூலம் வெளிப்பட்டது. இந்த வதந்திகளை ஃபிடல் காஸ்றோவும், சேகுவராவும் எப்படி இரசித்து மகிழ்ந்தார்கள் என்பது இந்நூலில் தெரிகிறது.

இந்திய இராணுவம், தமிழீழத்தினை ஆக்கிரமித்தநேரம், தமிழீழத் தேசியத் தலைவர் பிடிபட்டார், கைதுசெய்யப்பட்டார், கொலை செய்யப்பட்டார், மாத்தையா குழுவினரால் பிரபாகரன் கொலை - என்று உலாவிய வதந்திகள் அனைத்தையும் தூக்கி சாப்பிடும் வண்ணம் இருந்தது அமெரிக்க ஏகாதிபத்தியம் சேகுவரா குறித்துப் பரப்பிய வதந்திகள். இந்த சுவாரசியமான காலகட்டத்தை அருமையாக இந்நூலில் பதிவு செய்துள்ளார் ஃபிடல் காஸ்றோ.

மேலும் கியூபாப் புரட்சியின் போதைய சுவாரசிய சம்பவங்கள், அமெரிக்க எதிர்ப்பரப்புரை முறியடிப்பு, சேகுவராவின் இறுதி மணித்துளிகள் - குறித்து எழுதப்பட்ட - ஜனநாயக முகமூடிகளைக் கிழித் தெறியவைக்கும், புதுமையான சிந்தனைகளை வளர்த்தெடுக்கும் நூல் Che - A memoir by Fidel Castro.

கீழே குறிப்பிட்ட பகுதி மேற்கண்ட நூலில் இருந்து எடுக்கப்பட்டது. சேகுவரா குறித்து ஃபிடல் காஸ்றோ எழுதியுள்ள இந்த ஒரு பகுதிபோதும், இந்நூலின் போக்கை, சே அவர்களின் உறுதியை, ஆளுமையைப் புரிந்து கொள்ள... (இப்பகுதியின் மொழிபெயர்ப்புக் கீழே..)

"..சே - ஒரு அசாதாரணமான இராணுவத் தலைவன். ஆனால் அவரைப்பற்றி நாம் நினைவுகூரும் பொழுதுகளில், அவரை எண்ணும் பொழுதுகளில், வெறுமனே அவரது இராணுவ வல்லமை குறித்துமட்டும் நாம் சிந்திப்பதில்லை. ஆயுதப் போராட்டம் என்பது எமது கொள்கையை அடைய ஒரு வழி மட்டும்தான். அதுவே முடிவல்ல. ஆயுதப்போராட்டம் புரட்சியாளர்களின் கருவி மட்டுமே. அதைவிட முக்கியமானது புரட்சி. அந்தப் புரட்சிக்கான காரணி, புரட்சிக்கான எண்ணங்கள், புரட்சிக்கான நோக்கங்கள், புரட்சிக்கான பற்றுதல் மற்றும் நல்லொழுக்கம். இராணுவ வல்லமையில் மட்டுமன்றி, இந்தத்துறைகளிலும், அதாவது புரட்சிக்கான பற்றுதலில், புரட்சிக்கான ஒழுக்கத்தில், புரட்சிக்கான எண்ணத்தில், புரட்சிக்கான கூர்ந்த அறிவில் சே உயர்ந்து நின்றார். ஆகையால்தான் அவரது இழப்பு எமது புரட்சி இயக்கத்துக்கே ஏற்பட்ட பேரிழப்பாக அமைந்தது. ஒன்றாக இணைந்து காணப்படுவது அபூர்வம் என்று நினைக்கப்படும் குணங்கள் பலவற்றை உள்ளடக்கியதாக இருந்தது சே அவர்களின் அசாதாரண உருவாக்கம். செயற்றிறனில் அவரை மிஞ்ச எவரும் இல்லை. அதுமட்டுமல்ல.. தொலைநோக்கிய அறிவை, அகண்ட பண்பாட்டை, ஆழமான எண்ணங்களை ஒருங்கே கொண்டவர் அவர். எண்ணங்கள், செயற்றிறன் - இரண்டும் நிறைந்து இணைந்த உருவாக்கம்"



**வானதி**



A memoir by Fidel Castro

# நூலக இணையத்தளம்



நாம் பறையில் முதலில் குறிப்பிட்டு எழுதியிருந்த கனடா உலகத் தமிழர் சமூக நூலகத்தின் புதிய இணையத் தளம் இயங்கத் தொடங்கியுள்ளது.
இதில் நூல்களை அனைவரும் இணையத்தின் வழியாகப் பார்த்துத் தெரிந்து கொள்ளும் படியாக நூலின் தகவல்களுடன் பட்டியலிடப் பெற்றுள்ளது.
இனிவரும்நாட்களில் மேலும் இந்த இணையத்தின் பயன்களை விரிவாக்கவுள்ளதாக நூலகர் தெரிவித்தார்.

www.tamillibrary.ca

## மதங்க சூளாமணி

மதங்க சூளாமணி விபுலானந்தர் எழுதியது என்பது யாருக்கும் தெரியும். ஆனால் பலருக்கம் அது ஷேக்ஸ்பியரில் வந்த காதலால் அவரைப்பற்றி தலைப்பிட்டு விபுலானந்தர் எழுதிய நூல் என்பது தெரிந்திருக்காது. ஏதோ அவர் யாழ்நூல் போல மற்றுமொரு பெரும்பணி செய்ததாகப் பலரும் எண்ணுகிறார்கள்.

சமூக விடுதலைக் காப்பியம்

# விடுதலைபுரம்



பேராசிரியர் அறிவரசன் தொண்டினால் பழுத்தவர் மட்டுமல்ல, இலக்கிய அறிவிலும் நன்கு பழுத்தவர். மரபுக் கவிதைகள் எழுதுவோர் கொஞ்சம் கொஞ்சமாக அருகிவரும் இக்காலக் கட்டத்தில் மரபுவழி நின்றொழுகும் சிறந்த கவிஞராகவும் அவர் திகழ்கிறார்.

விடுதலைப்புரம் என்ற தலைப்பில் அவர், எழுதியுள்ள இக் காவியம் தெவிட்டாத தேனமுதமாகத் திகழ்கிறது. இனிய தமிழினில், அதுவும் எளிமையுடன், அதே வேளையில் இலக்கண நெறியிலிருந்து வழுவிச் செல்லாமல் சுவைபட எழுதியிருக்கிறார்.

பொதிகை மலையில் பிறந்த பொருநை ஆறு பாறைகளில் குதித்தோடிப் பாயும் போதும், பிறகு தரையில் பரவிப் பீடுறச் செல்லும் போதும் விதவிதமான எழிலைச் சிந்திய வண்ணம் ஓடுகிறது. அதைப் போலவே இக்காவியத்தில் தெள்ளு தமிழ் துள்ளி விளையாடுகிறது. இயற்கைப் புனைவுகள் நம் நெஞ்சைக் கொள்ளை கொள்கின்றன.

தமிழுணர்வு, சாதி ஒழிப்பு, பெண் விடுதலை போன்றவற்றை நீரோட்டமாகக் கொண்டு விடுதலைப்புரத்தை அவர் படைத்திருக்கிறார். நாவலூர்ச் சேரியில் பிறந்த மாரியப்பன் மீது, மேட்டுக்குடியிலே பிறந்த அறிவரசி கொண்ட காதல் உண்மையான தமிழ்காதலாக மலர்வதை ஆசிரியர் நயம் சொட்டச் சொட்ட விவரிக்கிறார்.

தமிழுணர்வின் நிலைக்களனாக விடுதலைப்புரம், ஆசிரியர் கற்பனையில் உதயமானாலும், எதிர்காலத் தமிழகம் எப்படி மலரவேண்டும் என்பதை இக்காவியத்தின் மூலம் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

*ஆசிரியர் - பேராசிரியர் அறிவரசன் - மக்கள் பதிப்பகம் 4/242, வ.உ.சி. தெரு, கடையம், 627415 - முதல் பதிப்பு, 2005 சூலை, விலை ரூபாய் 60/-*

பழ.நெடுமாறன்



inayam

## ரொரன்ரோவில் தமிழ்ச் சேவை இணையம் அறிமுகம்

ரொரன்ரோவில் ஓர் சேவை இணையம் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது. புலம்பெயர்ந்த மக்கள் செய்யும் பலவகைப்பட்ட விழாக்களும் ஒன்றுக்கொன்று நேரத்திலும் நாளிலும் ஒன்றுபோல் அமைந்துவிடுகின்றன. இப்படி ஒரே நேரத்தில் நடக்கும் இரு நல்ல நிகழ்ச்சிகளில் எதைத் தேர்ந்தெடுப்பது என்ற குழப்பத்தில் மக்களைத் தவிக்கவிடாமல் வைத்திருக்க இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

திருமண நிகழ்வுகளாயினும் தனியார் நிகழ்வுகளாயினும், பொதுக் கூட்டங்களாயினும் இந்த இணையத்தில் முன்கூட்டியே அனைவரும் பதிவு செய்து தங்கள் நிகழ்ச்சிகளை சிறப்புற அமைத்துக் கொள்ளலாம்.

நீங்கள் நிகழ்வுகளை அறிவித்தால் இணையத்திலிருந்து தொடர்பு கொண்டு அதை உறுதிப்படுத்திய பின்னரே நிகழ்வை இணையத்தில் அவர்கள் உள்ளிடுவது தனிச்சிறப்பு.

www.inayam.net

# காட்டுப்புள்

ஒன்றை நினைவு படுத்துவதற்கு இன்னொன்றைக் கதையாகச் சொல்வது எமது மரபு.
செம்பகமே செம்பகமே என்ற ராஜாவின் புகழ்பெற்ற பாடலோ அல்லது செம்பக - செண்பக மலரோ பலருக்கும் உடனே நினைவுக்கும் வரலாம். ஆனால் செம்பகம் என்றதும் அது ஒருவருக்கும் பறவையாக நினைவில் வரமாட்டேன் என்கிறது.

செண்பகப் பறவை குறித்து ஒரு நாட்டார் கதை உண்டு.

செண்பகப் பறவைக்கு சில மூலிகைளைப் பற்றித் தெரியும். அந்த மூலிகைகளைப் பயன்படுத்தித்தான் அந்த நாட்களில் கள்ளர் களவெடுக்கும்போது பூட்டை உடைப்பார்களாம்.
அந்த மூலிகையைக் கண்டுபிடிக்கக் கள்ளர் செண்பகத்தின் கூட்டை முதலில் கண்டு பிடிப்பார்களாம்.
அதில் செண்பகம் முட்டையிடும் வரை பார்த்திருந்து குஞ்சு பொரித்ததும் அதன் குஞ்சுகளை இரும்புக் கம்பியால் கட்டிப்போட்டு விடுவார்களாம்.
பின்னர் அதைக்கண்ட செண்பகப் பறவை வந்து அந்த இரும்புக் கம்பியை உடைக்கும் திறனுடைய மூலிகையைத் தேடிக் கண்டுபிடித்து கொண்டு வந்து குஞ்சுகளின் காலில் வைத்துவிடுமாம். அந்த மூலிகை பட்ட உடனேயே இரும்புக் கம்பி உடைந்து விழுந்துவிடும். இனி அந்தப் பறவையைத் துரத்திவிட்டு அந்த மூலிகையை கள்ளர் எடுத்துக் கொள்வார்கள்.

அதுசரி எப்பிடி அந்த மூலிகையை எடுப்பார்கள்? பறவையின் கூடு நிறைய குச்சிகள் தடிகளால் நிறைஞ்சிருக்குமே என்ற கேள்வியை உங்களைப் போல நானும் கேட்டிருக்கின்றேன்!

அதற்கும் ஒரு விளக்கமும் கதையும் உண்டு.

அந்தக் கூட்டைக் கொண்டுபோய் ஓடும் நீரில் அதாவது ஓடைபோன்ற ஒன்றில் போடுவார்கள். அதைப் போட்டதும், எல்லாக் குச்சிகளும் தடிகளும் நீரின் போக்கில் ஓடிவிடும். இந்தக் குறிப்பிட்ட மூலிகைக் குச்சிகள் மட்டும் நீரின் போக்கை எதிர்த்து ஓடும். அதை வைத்துத் திருடர்கள் தங்களுக்கு தேவையான மூலிகைக் குச்சியைக் கண்டுபிடித்து விடுவார்கள். பிறகென்ன அவர்கள் பாடு கொண்டாட்டம்தான். அந்தக் குச்சித் தடிகளைக் கொண்டுபோய் எந்தப் பூட்டில் வைத்தாலும் அது உடைந்து விழுந்து விடும்.
எனக்குப் பிறகும் சில கேள்விகள் வந்தன.

இதற்காக, ஏன் குஞ்சுகளை கட்டி வைப்பான்? ஏன் கூட்டைப் பிரிப்பான்? அதுக்குப் பின்னர் இந்தக் குஞ்சுகளுக்கு கூடு கட்டுமா செம்பகம்? அல்லது குயிலைப்போல வேறு பறவைகளின் கூட்டில் கொண்டுபோய் வைத்துவிடுமா? என்றெல்லாம் கேள்வி வந்திருக்கிறது. இதில் சிலதை இந்தக் கதைகள் சொல்லியவர்களிடம் கேட்டு, பிடரியில் வாங்கியதும் உண்டு. அதுக்காக கேக்காமலும் இருக்க முடியாது.

இந்தக் கதைகள் கேட்கும் காலத்தில் நீரை எதிர்த்து ஏடுகள் ஓடிய புராணங்களும் தமிழ் இலக்கியங்களும் நாட்டுப்புறவியல் புலத்தின் கதைக்கூறுகள் பற்றிய அறிவும் இல்லை. தற்போது பார்க்கும் போது இந்தக் கதைக்கான கதைக்கூறு (D1240. Magic waters and medicines. அல்லது Motif B30) போன்றனவாக இருக்கலாம் போல இருக்கிறது. இதைவிடப் பொருத்தமான வேறு ஏதாவது இருக்கலாம்.

கதை ஒரு புறம் இருக்க... செம்பகத்தை செம்போத்து என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை மீன்கொத்தி என்றும் கோட்டான் என்றும் தவறாக சில நூற்கள் குறிப்பிட்டிருக்கின்றன. செண்பகம் 'சென்றோப்பஸ் றூ·.பிபென்னிஸ்' என்ற விலங்கியல் பெயருடையதாக இருக்கும் என நினைக்கிறேன். அது சரியாயின் கீழே தரப்பட்டிருக்கும் படம்தான் செம்பகத்தினுடையது. முதுகில் மண் நிறமுடைய கறுப்புப் பறவை. இதைப்பற்றி முதலில் ரென்னெற் எழுதியிருக்கிறார் தனது இலங்கை (அப்போதைய) பற்றிய விவரிப்பில். ரென்னெற்றின் நூலையும் கீழே தந்திருக்கிறேன்.

செண்பகத்தைப் போல பல கதைகள் கொண்ட விலங்குகள் பறவைகள் தமிழரிடம் உள்ளன. அவற்றைப்பற்றி பின்னர் எப்போதாவது வேளை வரும்போது பார்க்கலாம்.

**மாமூலன்**



CEYLON: AN ACCOUNT OF THE ISLAND, JAMES EMERSON TENNENT 1860

---

பறைக்கு வரும் கட்டுரைகள், கதைகள் இரண்டரைப் பக்கங்களுக்குள் தட்டச்சில் அமைந்தால் நல்லது. அல்லது அதே அளவு வருமாறு கையெழுத்தில் அமைத்துக் கொள்ளலாம். தரம் கருதி வரும் பெரிய கட்டுரைகள் தேவை, இட, வெளி வாய்ப்புக் கருதி சுருக்கியோ அல்லது தொடராக்கியோ வெளியிடப்படும். கவிதைகள் சிறிதாக அனுப்பவும். நூல்கள் இருபடி அனுப்பினால் பார்வைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

*எந்தப் படைப்பும் பிற ஊடகங்களில் வெளி வந்திருப்பின் பறையில் வெளியிடப்படமாட்டாது.*

கட்டுரைகளை, ஒவ்வொரு இதழுக்கும், தட்டச்சு செய்ய வேண்டிய தேவையிருப்பின் அந்த மாதத்தின் 5 ஆவது தேதிக்கு முன்னதாகவும், தட்டச்சில் மின்னஞ்சல் மூலமாக 8 ஆவது தேதிக்கு முன்னரும் அனுப்பிவைக்க வேண்டுகிறோம். இதழுக்குக் கடிதங்கள் info@parai.org யிலும் ஆக்கங்கள் maamoolan@parai.org இலும் அனுப்பலாம்.



# KMB GRANITES of America Inc.

## Custom Kitchen & Bath Manufacturers













## Complete Kitchen and Bath Remodelling at Amazing Prices

## BEAT THE MIDDLEMAN - BUY DIRECT AND SAVE

**Factory & Quarry Direct**

**GRANITE - MARBLE**

**Tiles and Slabs**

**Over 500,000 SqFt in Stock**

| | |
|---|---|
| Granite Top | - $44.99 |
| Natural Slate | - $2.99 |
| Granite Tiles | - $4.49 |
| Hardwood | - $4.99 |




*In House*

*ARIDO Interior Designers*







**Total Home Renovation Solutions**







**FREE KITCHEN / BATH DESIGN AND ESTIMATE - SHOP AT HOME WITH EXPERT CONSULTATION**

தமிழரின் நிர்வாகத்தில் கே.எம்.பி கிரனைட்ஸ்: கிரனைட்ஸ், மார்பிள் கவுண்டர் ரொப், வனிற்றி, பயர் பிளேஸ், டயனிங் ரேபிள்,சிங்க், கிரனைட்ஸ் மார்பிள் ரைல்ஸ், சிலாப்ஸ்,சிலேட், செரமிக், ரைல்ஸ் மற்றும் வீட்டுக்குத் தேவையான எல்லாவகையான நிலத்தளங்களும் சமயலறை, குளியலறைகளின் அழகுக்கும் அழையுங்கள்!

One Stop Store for all your **HOME IMPROVEMENT** Needs

2139 Lawrence Ave. East, Unit # 2, Toronto, Ontario. www.kmbgranites.com

| | |
|---|---|
| Counters & Flooring | 416 332-0428 |
| Kitchen & Bath | 416 757-4554 |